# கல்கி

## பொருளடக்கம்

பராபவ பங்குனி 12 மார்ச் 26


| | |
|---|---|
| புதிய அரசாங்கம்... | — 3 |
| நாமும் நம்புவோம் ! | — 5 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | — 6 |
| இயந்திர மனிதன் | — 9 |
| ஆட்சி பீடத்தில்... | — 10 |
| பழைய பேப்பர்... | — 12 |
| பட்டம் ! | — 14 |
| ஜிம்மி | — 15 |
| மங்கள மாகாத்மியம் | — 16 |
| வட்டார நகைச்சுவை | — 22 |
| தேர்தல் அக்கப்போர் | — 24 |
| கல்லூருக்குள் ஈரம் | — 26 |
| வெண்ணிலவுப் பெண்ணரசி | 38 |
| இந்திய ஜனநாயகத்தின் ... | 49 |
| சிவனருட் செல்வர் | — 55 |
| தேர்தல் கலாட்டா ! | — 62 |
| முள்ளும் மலரும் | — 66 |
| தெய்வப் பிறவி | — 74 |
| வேம்பாதேவி | — 80 |


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

### நினைவுத் திரையில்...

ஒவ்வொரு ஜில்லாவிலும் ஜில்லா கலெக்டரும், ஜில்லா விவசாய உத்தியோகஸ்தரும் பிரபல விவசாயிகளும் சேர்ந்து நாளது வருஷத்தில் நூற்றுக்குப் பதினைந்து பங்கு விதம் உணவு உற்பத்தியை அதிகமாக்குவதற்குத் திட்டம் போட வேண்டும். நூற்றுக்குப் பதினைந்து பங்கு அதிகமாக்கத் திட்டம் போட்டால் 10 பங்காவது காரியத்தில் நிறைவேறும். போட்ட திட்டத்தில் படிக்குப் பாதியாவது நிறைவேறுகிறதா என்று பார்த்துக் கொள்வது மாகாண சர்க்காரின் பொறுப்பு. எந்த ஜில்லாவில் போட்ட திட்டம் படி காரியம் நிறைவேறுகிறதோ, அந்த ஜில்லாவில் ஒரு பெரிய திருவிழா நடத்தி அந்த ஜில்லாவின் சர்க்கார் உத்தியோகஸ்தர்களையும் விவசாயிகளையும் பாராட்டிக் கௌரவிக்க வேண்டும். உணவு உற்பத்தியைப் பெருக்க இரண்டு வழிகள் இருக்கின்றன. ஏற்கனவே பண்பட்டுத் தானியம் விளையும் நிலங்களில் இன்னும் அதிகமாக விளையும்படி செய்தல் முதல் வழி. தரிசாகக் கிடக்கும் நிலங்களைப் புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டு வருவது இரண்டாவது வழி. இந்த இரண்டு துறைகளிலும் கவனம் செலுத்த வேண்டும்.

- ''விவசாயி''

''பட்டினி என்னும் பகைவன்'' என்ற கட்டுரையிலிருந்து - கல்கி, 18-1-1948

இலங்கையில் 40 சதம் தபால் செலவு தனி


விமானம் எரிந்தாலென்ன? நாம் இன்னமும் ஸீட்டில்தானே இருக்கிறோம்!
காங்கிரஸ்

நாட்டில் பொற்கொல்லர்.. எவரேனும் இன்னும் மீதமிருக்கிறார்களா?

தமிழ்த்திருநாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 34



# புதிய அரசாங்கம் – பழைய கொள்கை

ஸ்ரீமதி இந்திராகாந்தி அவர்களின் தலைமையில் புதிய மந்திரி சபை பதவி ஏற்றுக் கொண்டு விட்டது.

பிரதம மந்திரி பதவிக்கு முதலில் ஏற்பட்ட போட்டி, பிறகு சிருஷ்டிக்கப்பட்ட ஏகமனதான முடிவு இரண்டைக் குறித்தும் நாம் கவனம் செலுத்த வேண்டியதில்லை. தேர்தலுக்குப் பின் மிகவும் பலவீனமுற்ற ஒரு ஸ்தாபனம், மக்களிடம் தனக்குக் கொஞ்சநஞ்சம் கௌரவம் எஞ்சியிருக்குமாயின் அதைக் காத்துக் கொள்ள வேண்டும் என்று பிரம்மப் பிரயத்தனம் செய்ததைத் தான் பிரதமர் தேர்வு காட்டுகிறது.

நாட்டின் மகத்தான பிரச்னைகளுக்கும், நாட்டின் நம்பிக்கையை வெகுவாக இழந்துவரும் ஒரு கட்சியின் உள் விவகாரங்களுக்கும் தொடர்பில்லை. புது மந்திரி சபை என்ன செய்யப் போகிறது என்பதும், என்ன செய்ய வேண்டும் என்பதும்தான் நம் கவனத்துக்குரிய முக்கியமான விஷயங்கள்.

பிரதமர் பழையவர்தான். ஆனால் காங்கிரஸின் நிலைமை புதிது. முன்பு மக்கள் சபையில் அதற்கிருந்த பெரிய மெஜாரிட்டியை இழந்து, 'தப்பினோம் பிழைத்தோம்' என்கிற ரீதியில் சர்க்கார் அமைக்கிற பலத்தை இப்போது அது பெற்றுள்ளது.

இந்த நிலைமை புதிது என்பதால் இதற்கேற்ப சர்க்காரின் கொள்கையைப் புதிதாக்கிக் கொள்ளும் விவேகம் இந்திரா அம்மையாருக்கு ஏற்பட வேண்டும்.

தேர்தலில் காங்கிரஸுக்கு எதிராக மக்கள் அளித்துள்ள தீர்ப்பு, அதன் கொள்கைகளுக்கு எதிராக மக்கள் அளித்த தீர்ப்பு என்பதைப் புதிய மத்திய அரசாங்கம் புரிந்து கொள்ள வேண்டும்.

இந்திரா காந்தி அவர்கள், பொதுவாகக் கொள்கை மாறுபாடு இராது என்பதைக் குறிக்குமுகமாகவே, 'உள் நாட்டில் ஜனநாயக சோஷலிஸமும் வெளிநாடுகளில் கூட்டு சேராத் தடஸ்தக் கொள்கையும் பின்பற்றப்படும்' என்கிறார். ஜனநாயக சோஷலிஸம், கூட்டுச் சேராமை இரண்டும் நேருஜி அளித்த சொற்றொடர்கள்—செயலுருவில் நிருபணம் ஆகாமலே, காதுக்கு மட்டும் உன்னதமாக முழங்கப்படும் அரசியல் மந்திரங்கள் இவை. நேருஜியின் புதல்வியார் பிதுரார்ஜிதத்தைக் காக்கும் கடமை போல் இந்த வெற்று வார்த்தைகளைப் பிடித்துக் கொண்டிருக்கிறார். நம் நாட்டில் பின்பற்றப்பட்ட சோஷலிஸம் ஜனநாயகத்துக்கு நேர் எதிர்த் திசையில் சர்க்கார் சர்வாதிபத்தியத்தை நோக்கிச் செல்வதையும், பொருளாதாரத்தில் நலிந்த நம் நாடு கூட்டுச் சேராமை காரணமாகச் சக்திக்கு மீறிப் பாதுகாப்புக்காகச் செலவு செய்ய நேர்ந்திருப்பதையும் பிரதமர் இன்னமும் உணரத் தவறினால் அதைவிடப் பரிதாபம் எதுவுமில்லை.

'எங்கள் கொள்கைகளில் தவறில்லை. அது அமுலான விதத்திலுள்ள தவறுகள் காரணமாகத்தான் காங்கிரஸுக்கு வெற்றி குன்றி விட்டது' என்று கட்சி அக்கிராசனர் கூறியிருக்கிறார். 'எங்கள் கொள்கைகள் தவறானவை' என்று ஒப்புக் கொண்டு பேசுவது தலைவருக்குச் சிரமம்தான். ஆகவே, பேச்சு எதுவாயினும், அவரது மனத்துக்குள் உண்மை புரிந்து அதைக் காரியத்தில் செய்ய முற்பட்டாரானால் போதும்.

கொள்கைகள் சரியா தவறா என்பதும்கூட அவை அமுலாகும் விதத்தாலேயே ஓரளவுக்கு நிர்ணயிக்கப்படுகின்றன. சில கொள்கைகளைச் சரியாக அமுல் செய்ய முடியவில்லை என்றால், அது அமுல் செய்பவர்களின் தவறாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை; கொள்கைகளிலுள்ள தவறு காரணமாகவே, எப்பாடுபட்டாலும்

அவற்றை அமுல் செய்ய முடியாமல் போவதும் உண்டு. எவ்வளவுதான் முயன்றாலும் இயற்கைக்கு மாறான கொள்கைகளை அமுல்படுத்த முடியாது. உற்பத்திப் பெருக்கத்துக்கு முதலீட்டாளரின் ஊக்கம்தான் ஆதாரம். இதை மறுத்துச் செய்யும் சோஷலிஸத் திட்டம் எதனாலும் பயன் காண முடியாது.

புதிய சர்க்கார் செய்ய வேண்டிய மிக முக்கியமான காரியம், 'சோஷலிஸம் என்கிற சர்க்கார் சர்வாதிபத்தியத்துக்கு அடிகோலும் நான்காம் திட்டத்தை அடியோடு கைவிடுவதுதான். இன்றைய பொருளாதார நிலையில் இத்திட்டத்தை ஏற்பது குரங்கின் தலையில் பனங்காய் வைப்பதைவிடக் கொடூரமாக இருக்கும். வரிகளை உயர்த்த இனி இம்மியும் வாய்ப்பில்லை. கண்மூடித்தனமாக அந்நியக் கடன்கள் பெறவும் வழி கிடையாது. இதைப் புரிந்து கொண்டுதான் காங்கிரஸே தேர்தலின் போது வெகு சாமர்த்தியமாகத் திட்டத்தைப் பற்றிய பிரஸ்தாபத்தை விட்டு விட்டு வோட்டுக்கு மன்றாடியது. இப்போது தயக்கம் எதுவும் இன்றி இந்தக் காரியசாத்தியமற்ற திட்டத்தை இந்திரா சர்க்கார் கைவிட்டாக வேண்டும். இதன் அவசியத்தை நாம் சொல்வதைவிடக் காங்கிரஸ் பிரமுகரும் முன்னாள் திட்ட முக்கியஸ்தருமான ஸ்ரீ குல்ஜாரிலால் நந்தர் அவர்களே மிகவும் தெளிவாகவும் அழுத்தமாகவும் எடுத்துக் காட்டியிருப்பதை அரசாங்கம் கவனிக்க வேண்டும். 'இன்றைய திட்டச் சிந்தனைக்கே தேர்தல் முடிவு ஒரு சவாலாகும். வறுமையையும், வேலையின்மையையும் தீர்ப்பதில் திட்டங்கள் என்ன செய்துள்ளன என்பதை வைத்தே தேர்தல் முடிவுகள் அமைந்துள்ளன. தமது அன்றாட வாழ்க்கையைத் திட்டம் எப்படிப் பாதித்துள்ளது என்பதைக் கொண்டு, அதாவது விலைவாசி உயர்வையும் உணவு முதலிய அத்தியாவசியப் பொருட்களின் பற்றாக்குறையையும் கொண்டே மக்கள் வாக்களித்திருக்கின்றனர். ஆட்சியாளர்களுடைய ஆசைக்கு ஈடாக மக்களுடைய சக்தி இல்லை. அபிவிருத்திக்கு ஒவ்வ விலைகள் உயர்வது உண்டு எனினும், நம் நாட்டில் விலை உயர்வுக்குச் சரியாக அபிவிருத்தி ஏற்பட்டுள்ளதா என்று பார்த்தால் விலைவாசி உயர்வு முற்றிலும் நியாயமற்றது என்று தெரியும். எதிர்காலத்துக்குரிய படிப்பினை பெற வேண்டுமாயின் இதுவரை செய்த பிரம்மாண்டமான முதலீடுகள் ஏன் எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை என்பதை ஆழ்ந்து ஆராய வேண்டும்' — இவ்வாறெல்லாம் கூறும் ஸ்ரீ நந்தர் அவர்கள் 'கொள்கை சரி; அமுலில் தான் தவறு' என்பவர்களுக்கும் பதில் சொல்லியுள்ளார்: 'அமுல் செய்வதில் தொடர்ச்சியாகத் தோல்வியே ஏற்படுவது, திட்டமிடும் முறையிலேயே கோளாறு உள்ளதா என்ற கேள்வியை எழுப்புகிறது' என்கிறார்.

பிரதமரும், திட்ட மோகம் கொண்ட ஸ்ரீ அசோக் மேதாவும், வரி மோகம்கொண்ட ஸ்ரீ மொரார்ஜி தேசாயும் எந்த அளவுக்கு இந்த நல்லுரையைக் காதில் வாங்கிக் கொள்வார்கள் என்பதைப் பொறுத்தே தேசத்தின் எதிர்காலம்.

# அடாத நடவடிக்கை

ராஜஸ்தானத்தில் ராஷ்டிரபதி ஆட்சி பிரகடனமாயிருப்பது ஜனநாயகத்திலும் சட்டத்தின் ஆட்சியிலும் அக்கறை கொண்ட அனைவருக்கும் அதிர்ச்சியை அளித்திருக்கிறது.

காங்கிரஸ் கட்சியும், எதிர்க்கட்சிகளின் கூட்டணியும் தத்தமக்கே மெஜாரிட்டி இருப்பதாக அறிவித்தபோது, 'சுயேச்சையாளரைக் கணக்கிலேயே எடுத்துக் கொள்ள மாட்டேன்' என்று கவர்னர் ஸ்ரீ சம்பூர்ணானந்தர் கூறிக் காங்கிரஸை மந்திரி சபை அமைக்கச் சொன்னது முதல் அதிர்ச்சி. அதையடுத்து, அம்மந்திரி சபையை அகற்றுவதற்குச் சட்டரீதியில் சட்டசபையில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரும் உபாயம் இருக்க, கலகமும் போலீஸின் துப்பாக்கிப் பிரயோகமும் உயிர்ச் சேதங்களும் விளைந்தது இரண்டாவது அதிர்ச்சி. தம்மால் அரசாங்கத்தை நடத்த முடியாது என்று காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ சுகாடியா கைவிரித்த பின்னர், எதிர்க்கட்சிக் கூட்டணியிடம் ஆட்சிப் பொறுப்பைத் தந்து, சட்டசபையில் தனது பலாபலத்தை அது நிரூபித்துக் கொள்ளவொட்டாமல் சட்டசபைக் கூட்டத்தையே நிறுத்தி வைத்து அங்கு ராஷ்டிரபதியின் ஆட்சியை ஏற்படுத்தியிருப்பது பேரதிர்ச்சி.

எதிர்க்கட்சிக் கூட்டணி அறுதிப் பெரும்பான்மைக்கு அதிகமாகவே ஸ்தானங்கள் பெற்றுள்ளது என்பதை ஸ்தூலமாக நிரூபிப்பதற்காகத் தொண்ணூற்று மூன்று சட்டசபையாளர்கள் ராஷ்டிரபதியையும், உள்துறை மந்திரியையும் நேரில் சந்தித்த பின்னும் பழைய முடிவு மாற்றப்படாமலிருப்பது எல்லாவற்றிலும் மகத்தான அதிர்ச்சியாக உள்ளது.

ராஜஸ்தான் சட்டசபை கூடுவதற்கு அனுமதித்தால் எதிர்க் கட்சிக்கு மெஜாரிட்டி உள்ளதா இல்லையா என்பதை வெகு எளிதில் கண்டுபிடித்துவிடலாம். ராஜ்யத்தின் சர்க்காரை ஒப்புக் கொள்வதும் விலக்குவதும் மக்கள் பிரதிநிதிகளுக்குள்ள உரிமையே. இன்று ராஜஸ்தானம் உள்ள கொந்தளிப்பு நிலையில் கூட்டணி ஆட்சிப் பொறுப்பை வகிப்பது சிரமம் என்று பாரத சர்க்கார் நினைத்தாலும், அந்தச் சிரமத்தைக் கூட்டணியே நேரில் கண்டு, இப்போது சுகாடியா தாமாக விலகியது போல் விலகத்தான் வழி செய்திருக்க வேண்டும். எப்படிப் பார்த்தாலும் மத்திய சர்க்காரின் முடிவுக்கு ஆதாரமாகச் சொல்லக்கூடியது எதுவும் இல்லை. இந்திராகாந்தி அவர்களின் புதிய மந்திரி சபை எடுத்த முதல் நடவடிக்கை இவ்வாறு ஜனநாயகத்துக்கு முற்றிலும் விரோதமாக அமைந்திருப்பது நல்ல சூசகம் அல்ல.

# நாமும் நம்புவோம்!

சமீபத்தில் ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயணர் வெளியிட்ட பல ஆணித்தரமான உண்மைகளை வாசகர்களின் முன் வைக்கிறோம்.

''ராஜ்யங்கள் பலவற்றில் அமைந்துள்ள காங்கிரஸல்லாத மந்திரி சபைகள் அனைவரது நல்லெண்ணத்தையும் ஒத்துழைப்பையும் அநுதாபமான கவனத்தையும் பெறத் தக்கவை. ஏனெனில், நாட்டு வாழ்வின் பல துறைகளிலும் ஏற்கனவே செய்யப்பட்டுள்ள குழப்பங்களைச் சீர் செய்ய வேண்டிய கடினமான பணி அவற்றின் முன் உள்ளது.

''காங்கிரஸல்லாத அரசாங்கங்கள் மக்களுடன் அதிக நெருக்கம் கொண்டிருப்பதால், அவை திட்டங்களை யதார்த்த நோக்குடன் அணுகும் என்றும், முதலில் கவனிக்க வேண்டிய விஷயங்களுக்கு முக்கியத்துவம் தரும் என்றும் நம்புகிறேன். முதல் முக்கியத்துவம் விவசாயத்துக்கு அளிக்கப்பட வேண்டும். தொழில் துறையில் ஏராளமான மக்களுக்கு வேலை கிடைக்கச் செய்வதை அடிப்படையாகக் கொண்டே திட்டமிட வேண்டும்.

''விலைவாசி உயர்வும், உணவுத் தட்டுப்பாடும்தான் காங்கிரஸின் தோல்விக்குக் காரணங்கள் என ஸ்ரீ காமராஜ் எண்ணுகிறார். ஆனால் இவை காரணங்கள் அல்ல; பின்விளைவுகள்தாம். தவறான கருத்தில் வகுத்த திட்டங்கள், பிழையான பொருளாதாரக் கொள்கைகள் ஆகியவற்றின் விளைவே விலை உயர்வும் உணவுத் தட்டுப்பாடும். இதே போல் காங்கிரஸின் தோல்விக்கு இன்னொரு முக்கியமான காரணம் உண்டு. லஞ்ச ஊழலைக் காங்கிரஸ் மானமில்லாமல் சகித்துக் கொண்டிருந்ததுதான் அது. மிக உயர் மட்டங்களிலும், நிர்வாக இயந்திரத்திலும்கூட லஞ்ச ஊழல் பரவியிருந்தது. தீர்க்கவொண்ணாத அதிகாரப் பசியும், எது எப்படியாயினும் அதிகாரத்தில் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும் என்ற ஆசையுமே காங்கிரஸை ஊழலைச் சகித்துக்கொள்ளுமாறு செய்தன.

''காங்கிரஸ் தனது ஊழல்களைக் களைய முடிவு செய்திருக்கிறதென்றோ, அதன் அதிகாரப் பசி சிறிதேனும் அடங்கியிருக்கிறதென்றோ எண்ணத்தக்க அறிகுறி எதுவும் இன்னமும் தோன்றவில்லை. நீண்ட கால அதிகார அநுபோகத்தால் காங்கிரஸ் மக்களின் வெறுப்பைச் சம்பாதிக்கும் வகையில் பெற்றிருந்த இன்னொரு கொடிய குணம் அதன் ஆணவமாகும். கலகம் ஏற்பட்டாலன்றி மக்களின் கருத்தை அது முற்றும் அலட்சியம் செய்தது.

''தேர்தல் இந்தியாவில் ஜனநாயக முறையை அளப்பரிய விதத்தில் பலப்படுத்தி விட்டது. எனினும், காங்கிரஸ் கட்சிக்குள் அது ஆன்ம சோதனையையும் புத்துணர்வையும் ஏற்படுத்தாவிடில் விசனிக்க வேண்டும்.''

காங்கிரஸல்லாத கூட்டணிகளில் பலவிதமான கருத்துப் பிரிவுகள் இருப்பதை வருத்தத்துடன் குறிப்பிடும் ஜயப்பிரகாசர், தி. மு. க. ஆட்சி பெற்றுள்ள தமிழகமும் சுதந்திரக் கட்சியின் முன்னணியில் ஆட்சி பெற்றுள்ள ஒரிஸ்ஸாவும் இதற்குச் சிறப்பான விதிவிலக்குகள் எனப் பாராட்டுகிறார்.

''வாக்குப் பிரயோகத்தில் சிறந்த பகுத்தறிவைக் காட்டியுள்ள நம் மக்கள் பல கட்சிகள் ஒட்டுப் போட்டுக் கொள்வதோடு மட்டுமின்றி ஒன்றுபடுமாறும் ஊக்குவார்கள் என்று நம்புவோம். கொள்கையில் நெருக்கமாக உள்ள கட்சிகள் நிரந்தரமாக இணையும் என நம்புவோம். முக்கியமாக சோஷலிஸக் கட்சிகள் ஒருபுறமும், தனி மனித சுதந்திரம் — சுதந்திரத் தொழிலுரிமை இவற்றை மதிக்கும் கட்சிகள் ஒருபுறமுமாக ஒன்றுசேரும் என நம்புகிறேன்'' என்கிறார்.

ஜயப்பிரகாசருடன் சேர்ந்து நாமும் நம்புவோமாக.

## காமகோடியின் கருணைமொழி

பசு என்று இரண்டு எழுத்தைச் சொன்னவுடனே பசுமாடு ஞாபகம் வருகிறது. ப+சு என்று எழுதினால் இரண்டு எழுத்துக்கள்தான். அவை சில கோடுகளே. காதாலே கேட்கிற ஒரு சப்தம் என்று சொல்லலாம். இதற்கும் பசு மாட்டுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? இந்த வார்த்தையைச் சொன்னவுடனே அந்த வஸ்து நினைவுக்கு வருகிறது. அல்லது அதைக் கண்டவுடனே இந்தச் சொல் நினைவுக்கு வருகிறது. இதுவும் அதுவும் இணை பிரியாமல் இருப்பது தெரிகிறது. இதை நாமரூபம் என்று சொல்வார்கள். பசு என்பது வாக்கு. அதன் அர்த்தமாகிய உருவம் மாடு. ஒன்றைச் சொன்னால் மற்றொன்று உடனே நினைவுக்கு வந்துவிடுகிறது. இந்த இரண்டையும் பிரிக்க முடியவில்லை. அப்படியே அம்பாளும் பரமேசுவரனும் இணை பிரியாமல் இருக்கிறார்கள்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

நல்ல ஆலோசனையின் மீது, மிகவும் ஜாக்கிரதையாக அரசாங்கம் தலையீடு செய்தால் அது தேசிய சக்தியைத் தடுக்காது; தேச சக்தி நன்கு வெளிப்படவே உதவும். அதிகார துஷ்பிரயோகம், சுரண்டல் முதலியவற்றைத் தடுக்கச் சர்க்கார் தலையீடு மிகவும் உபயோகமாயிருக்கும். ஆனால் இது, முன்பே சொன்னது போல், மிகவும் ஜாக்கிரதையாக அளவறிந்தே கையாளப்பட வேண்டும். இந்தச் சிறிய அளவு கட்டுப்பாடு போக, மற்றபடி தொழில் சுதந்திரம் ஏற்பட வேண்டியது அவசியம். காங்கிரஸின் பெர்மிட் — லைசென்ஸ் ராஜ்யத்திலிருந்தும் அதன் விளைவான அதருமங்களிலிருந்தும் தொழில் துறை விடுதலை பெற வேண்டும். இறுதியில் இத்தகைய தொழில் சுதந்திர நிலை ஏற்பட வேண்டும் என்பதை எல்லாக் கட்சிகளும் ஒப்புக் கொள்ள வேண்டும். ஜனநாயகமும், முன்னேற்றமும் உரியபடி அமைய இதுவேவழி. தேசத்தின் உயிர் தனிமனிதன்தான். சர்க்கார் என்கிற உயிரற்ற இயந்திரமல்ல. தேசத்தின் நலன்களுக்காகப் பணி புரிய வேண்டிய சர்க்கார், ஒருகாலும் தனிமனிதனின் இடத்தைப் பெற முடியாது. எல்லோரையும் சிறைப்படுத்தினாற்போலாக்கி வேலை வாங்குவது ஒருபோதும் தரத்தில் சிறந்திருக்க முடியாது. சிறைச்சாலையில் ஒழுங்கு ஏற்படுத்துவதற்காகக் கைதிகளை வேலை வாங்குவதற்கு மட்டுமே அது பயன்படும். தேசம் முழுவதற்கும் இதை விஸ்தரிக்க முடியாது. சர்க்காரின் தொழில் பிரவேசம் அடிமைகளை வேலை வாங்குவதற்கொப்பானதே. இதை விடுத்து, தனது தொழிலின் பயனிலும் அறிவின் பயனிலும் நல்ல பங்கினைத் தனி மனிதன் பெறுமாறு செய்வோம். அப்போது அவனது தனிப் பண்பும், உற்சாகமும் விடுபட்டுச் சிறப்பாக இயங்கும்.

தேசத்தைத் தொழில்மயமாக்கும் திட்டம் ஏராளமான மக்களுக்கு வேலை வாய்ப்பு அளித்தால்தான் நிறைவுபெறும். கோடானு கோடி ரூபாய்களை முதலீடு செய்து திட்டம் போடும் முன்பு, அதன் மூலம் தேசமெங்கிலும் வேலைவாய்ப்புக்களை வெகுவாக விஸ்தரிக்கும் உபாயங்களைக் கருத்தில் கொள்ள வேண்டும். இதுவரை இவ்வாறு செய்யப்படவில்லை. பணத்தைத் தவறான வழியில் முதலீடு செய்ததாலேயே தேசம் முழுவதிலும் துன்பமும் கோபமும் பெருகின. இவற்றையே சமீபத்திய தேர்தல் வெளிப்படுத்தி விட்டது.

* * *

சுதந்திரக்கட்சி பணக்காரர் கட்சி என்று சொல்வது அபவாதம். அப்படி நினைப்பது அபத்தம். உற்பத்தி செய்வதற்கு மூலதனம் இருக்கத்தான் வேண்டும் என்பது தவிர்க்க முடியாத ஒரு தேவை. ஆனால் இதற்காகத் தேச நலன்களுக்கும், ஏழைகளின் உரிமைகளுக்கும் விரோதமாக முதலீட்டாளர்களுக்குச் சலுகை தர வேண்டும் என்றாகாது. மனித சக்தியையும் உற்பத்தியையும் குறித்த இயற்கை விதிகளை ஒப்புக் கொண்டு அதற்கிசையச் [செல்ல] வேண்டும் என்பது சுதந்திரக்கட்சியின் அடிப்படைக் கொள்கை. தேசத்தை வளம் பெறச் செய்வதற்காக மக்கள் எல்லாத் துறைகளிலும் உழைத்தாக வேண்டும். இவ்வாறு உழைக்கச் செய்வதற்கு வழி என்ன? நிர்ப்பந்தத்தின் மூலம் முடியாது. உற்பத்தி உயர்விலும் மக்கள் சொந்த நலன்களைப் பெறுமாறு செய்தால்தான் முடியும். யுத்தம் அல்லது புரட்சி ஏற்படும் காலங்களில்தான் சொந்த நலன் என்ற நோக்கத்தைப் பாராமல் மக்கள் உழைக்கக் கூடும். ஆனால் இது தாற்காலிக உணர்ச்சியாக மறைந்து போகும். இதை நிரந்தரமாக்க முடியாது. மனித இயல்பை ஒட்டித்தான் நாம் நடந்து கொள்ள வேண்டும். உழைப்பும் முதலும் தருபவர்கள் உற்பத்திப் பயனில் பெரும் பங்கு பெற வழி செய்ய வேண்டும். இதில் சர்க்கார் தாராளமாகவே இருக்க வேண்டும். காலக்கிரமத்தில் இந்தத் தாராள மனப்பான்மையால் பெருத்த லாபம் காண முடியும். இதற்கு மாறாக, மூலதனத்தை வரியால் பறிப்பது பொன்முட்டையிட்ட வாத்தை அறுத்துப் பார்த்த கதையாகவே முடியும். அதிக வரி தேசத்துக்கு ஒரு நாளும் உதவாது. அதன் விளைவு தற்கொலைக்கு ஒப்பாகவே முடியும். இப்பிரச்னையில் விவேகம் வேண்டும் என்பதே சுதந்திரக் கட்சியின் அறைகூவல். இவ்விஷயங்களில் பொதுமக்களுக்குச் சரியான பாதையில் நல்லறிவு புகட்ட வேண்டும்; ஜனரஞ்சகமாகப் பேசிப் பெருத்த மக்களாதரவைப் பெறுவது பற்றி எண்ணாமல், மக்களுக்குப் பொருளாதார அறிவு புகட்ட வேண்டும் என்று சுதந்திரக் கட்சி விரும்புகிறது.

சுதந்திரக் கட்சிக்கு மத்திய அரசாங்கத்திலும், மாநில அரசாங்கங்களிலும் ஆட்சிஸ்தானம் கிடைப்பதும் கிடைக்காததும் வேறு விஷயம். அதெப்படியாயினும் மக்களுக்குச் சரியான, விவேகமான அரசியலையும் பொருளாதாரத்தையும் உணர்த்துவதே கட்சியின் பணி. இறுதியில் ஆட்சியும் அதிகாரப் பொறுப்பும் பெறும் நோக்கத்துடன் ஆயிரமாயிரம் அரசியல்வாதிகள் சேர்ந்து இந்தப் பணியைச் செய்யலாம். அல்லது அவ்வளவு பெரிய எண்ணிக்கையாக இன்றிச் சிறிய அளவில் கோஷ்டியாக அமைந்துள்ள ஆண் — பெண்களும் இப்பணியில் ஈடுபடலாம். ஆட்சியும் பதவியும் நமக்குக் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் மக்களுக்கு அறிவு புகட்டுவதே நமது நிரந்தரமான குறிக்கோள். ஆட்சியைப் பிடிப்பதற்காக வாக்காளர்களைத் தவறான வழியில் இழுத்துச் செல்வதை நாம் ஒரு நாளும் செய்யலாகாது.

இந்தியா உண்மை விடுதலையும் நல்லறிவும் பெற 1967ம் வருஷத்தியத் தேர்தல் தெளிவான வழி ஏற்படுத்தி விட்டது; மக்களின் தனிப் பண்பும் உழைப்பும் சுதந்திரம் பெற வழி ஏற்படுத்திவிட்டது; விவேகத்துடன் கட்டுப்பட்டு மேற்பார்வை புரியும் மத்திய சர்க்காரின் கீழ் மாநிலங்கள் சுயாதீனம் பெறவும் தேர்தல் வழிகாட்டிவிட்டது.

# பொருள்களை வைக்க கீரா காபினெட்டுகள்!

கீரா ஸ்டீல் காபினெட்டுகள் அழகான மெருகுள்ளவை... துருவினாலும் அரிப்பினாலும் பாதிக்கப்படா மலிருக்கும்படி 'ட்ரீட்' செய்த எஃகினால் தயாரிக்கப்பட்டவை. இவை நீண்டகாலம் நிலைக்கின்றன. பொருள்களை வைக்க இவை வசதியானவை, பத்திரமானவை. எல்லா காபினெட்டுகளுக்கும் பத்திர மாக பூட்டும் ஏற்பாடு உள்ளது. இவற்றின் ஷெல்ஃபுகளை வேண்டும்படி பொருத்திக்கொள்ளலாம்; பொருத்தமான 'ஃபிட்டிங்குகள்' கூட கிடைக்கும். வீட்டிலும் சரி, ஆஃபீஸிலும் சரி, உங்கள் பொருள் களை பத்திரமாக வைக்க கீரா காபினெட்டுகளே சிறந்தவை!



'யுடிலிடி': 1971 எம்.எம். x 910 எம்.எம். x 481 எம்.எம். (78"x36"x19")



'பாபுலர்': 1641 எம்.எம். x 831 எம்.எம். x 481 எம்.எம். (65"x33"x19")



'மிஜட்': 1270 எம்.எம். x 760 எம்.எம். x 481 எம்.எம். (50"x30"x19")

JWT-KSW-488J

Khira

கீரா ஸ்டீல் ஒர்க்ஸ் பிரைவேட் லிமிடெட்
ஸ்வாமி விவேகானந்தா ரோட், ஸாந்தா க்ரூஸ், பம்பாய்-54

# உங்கள் பொறுப்புக்கள் பெருகப் பெருக

# சேமிக்கவேண்டிய உங்கள் தேவையும் பெருகும்

எதிர்காலம் நிச்சயமற்றது, பொறுப்-
புக்களைத் தாங்கி வருவது. அவற்றுக்கு
ஈடுகொடுக்கத் தயாராய் இருக்கிறீர்
களா நீங்கள்? இன்றே சேமிக்கத்
தொடங்குங்கள். நாளையத் தேவைகளை
நிறைவு செய்துகொள்ள, சவாலவிடும்
எதிர்காலத்தை எதிர்கொள்ள ...
சேமியுங்கள் சேமியுங்கள ஸ்டேட
பாங்க் ஆப் இந்தியாவிலே
உங்களுக்கு உதவிபுரியவே 4100
கிளைகளையும், மற்றும் துணையகங்களை
யும் உடையது ஸ்டேட பாங்க

## சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்



LPE Aiyars S. 247 TH



# இயந்திர மனிதன்

சோவியத் விஞ்ஞானிகள் ஓர் இயந்திர மனிதனைக் கொண்டு, கடலின் அடியில் மறைந்து கிடக்கும் செல்வங்களைக் கண்டு பிடிக்கத் திட்டமிட்டுள்ளனர்.

இந்த இயந்திர மனிதனைத் தயாரிக்கும் வேலை துரிதமாக நடைபெற்று வருகிறது. இம்மனிதனைச் சுமார் நாலாயிரம் மீட்டர் வரை கடலினுள் இறக்கி விடுவார்கள். நம்மைப் போலவே இம்மனிதனுக்கும் இரு கைகள் உண்டு. இவன் நடவடிக்கைகளை, வெளியே இருந்து டெலிவிஷனில் கவனிக்கும் வல்லுநர்கள், ஏதேனும் விலையுயர்ந்த கற்களையோ அல்லது பூமி சாஸ்திர ஆராய்ச்சிக்குத் தேவையான பொருள்களையோ கண்டால் உடனே 'இயந்திர மனித'னுக்குச் செய்தி அனுப்புவர். செய்தி கிடைத்ததும் இயந்திர மனிதன் அந்தக் கற்களை எடுத்து ஒரு கூடையில் போட்டுக் கொள்ளுவான். இந்த இயந்திர மனிதனைக் கண்டு பிடித்ததன் மூலம், கடலின் அடியில் மறைந்துள்ள பல ரகசியங்களை அறியலாம் என்று விஞ்ஞானிகள் நம்புகின்றனர்.

ஆதாரம்: அமிர்தபஜார் பத்திரிகா
தகவல் : வி. சம்பத்குமார்

பிரிட்டனில் உள்ள தபால் நிலையங்கள் ஒரு நாளில் மூன்றரைக் கோடி கடிதங்களையும் எட்டு லட்சம் பார்ஸல்களையும் பட்டுவாடா செய்ய வேண்டிய நிலையில் உள்ளன. மொத்தம் அந்நாட்டில் உள்ள தபால்காரர்கள் ஒரு லட்சத்துப் பத்தாயிரம்.

லண்டனில் போஸ்ட் ஆபீஸுக்குச் சொந்தமான நகருக்கு அடியில் (பூமிமட்டத்தின் கீழ்) ஓடும் பிரத்தியேக ரயில்வேக்கள் உண்டு. சுரங்கப் பாதையில் ஆறரை மைல் நீளமுள்ள தண்டவாளங்களில் இந்த ரயில்கள் ஓடுகின்றன. ஒரு தபால் நிலையத்திலிருந்து இன்னொரு தபால் நிலையத்துக்கும் முக்கிய ரயில்வே ஸ்டேஷன்களுக்கும் கடிதங்கள், பார்ஸல்கள் இவற்றை ஏற்றிக் கொண்டு போகின்றன. இந்தக் குட்டி ரயில்களில் மனிதர்கள் பிரயாணம் செய்ய முடியாது. கடிதங்களுக்கு மட்டுமே ஏற்பட்டவை இவை. கடிதங்கள் அடங்கிய நாற்பத்தையாயிரம் பைகளைத்தினந்தோறும் ஏற்றிப்போகின்றன. இது தவிர கடிதங்களைக் கையாள்வதில் வியக்கத்தக்க வித்தைகளைப் புரியும் சில இயந்திரங்களைப் பயன்படுத்துகிறார்கள்.

கடிதங்கள் வேறு, புத்தகங்கள், சஞ்சிகைகள் போன்ற பார்ஸல்கள் வேறு என்று பிரிக்க இயந்திரங்கள் உள்ளன. பிறகு கடிதங்களை அளவில் பெரிது என்றும் சிறிது என்றும் தரம் பிரிக்க இயந்திரம் இருக்கிறது. ஒரே அளவினதான கடிதங்கள் இப்படி ஒன்று சேர்ந்த பிறகு அக்கடிதங்களை யெல்லாம் விலாசம் மேல்புறம் இருக்கிற மாதிரியாக—ஸ்டாம்பு வலதுபுறம் மேலே — அடுக்கிவிடுகிறது ஓர் இயந்திரம். பிறகு அதுவே ஸ்டாம்புகள் மீது முத்திரை அடித்து அவற்றைச் செல்லாதவையாக்கி விடுகிறது. இது மட்டுமா? இந்த எலக்டிரானிக் சகாப்தத்தில் பல்வேறு ஊர்களுக்குச் செல்லும் கடிதங்களையும் தனித் தனியே பிரித்துத் தரக்கூடிய இயந்திரங்கள் உள்ளன !

ஸார்ட்டிங் ஆபீஸில் கடிதங்களைப் பிரிப்பவர் சாதாரணமாக அனைத்தையும் நாற்பத்தெட்டு பகுதிகளாகப் பிரிப்பார் என்றால் இந்த இயந்திரம் நூற்று நாற்பத்துநாலு பகுதிகளாகப் பிரிக்கும் வல்லமை படைத்திருக்கிறது. அத்துடன் மனிதன் எடுத்துக் கொள்ளும் நேரத்தில் பாதி நேரம்தான் ஆகிறது, இந்த இயந்திரத்துக்குக் குறிப்பிட்ட அளவு வேலையைச் செய்து முடிக்க.

—''காமன்வெல்த் டுடே''

---

ஜெர்மனியில் பான் நகரில் ஆல்லாண்டர் என்ற முப்பத்தி மூன்று வயது இளைஞர், செயற்கைக் கோள் ஆராய்ச்சியைத் தமது பொழுதுபோக்காகக் கொண்டிருக்கிறார். இவர் தமது வீட்டு மேல் மாடியிலேயே பலவித சாதனங்களைப் பொருத்தி யிருக்கிறார். 'லூனா—9' செயற்கைக் கோள் சந்திரனில் இறங்கியதை இவர் படம் பிடித்திருக்கிறார். (யூ. பி. எஸ்.)



# ஆட்சி பீடத்தில் சுதந்திரக் கட்சி

ஒரிஸ்ஸா ராஜ்யத்தில் சுதந்திரக் கட்சியின் தலைவர் ஸ்ரீ ஆர். என். சிங்தேவ் அவர்கள் தலைமையில் சுதந்திரக் கட்சியும், ஜன காங்கிரஸ் கட்சியும் சேர்ந்த ஒரு கூட்டு மந்திரி சபை அமைக்கப்பட்டிருக்கிறது. இவ்விதழ் அட்டையை அலங்கரிப்பவர் ஒரிஸ்ஸா ராஜ்ய சுதந்திரக் கட்சியின் தலைவரும் முதன் மந்திரியுமான ஸ்ரீ ஆர். என். சிங்தேவ் அவர்கள். ஒரிஸ்ஸா ராஜ்யம் அவருடைய தலைமையில் பல துறைகளில் முன்னேறிச் சுபிட்சம் பெறுவதாக!

மகாராஜாக்கள் கட்சி என்ற தவறான குற்றச்சாட்டுக்குச் சுதந்திரக் கட்சி இலக்கானதற்கு ஸ்ரீ ஆர். என். சிங்தேவ் அவர்கள் ஓரளவுக்குப் பொறுப்பேற்க வேண்டும்! ஏனெனில் அவர் ஒரு மாஜி மன்னர். ஆனால் அவரைப் போன்ற உத்தமமான ஜனநாயக புருஷரைக் காண்பது அரிது.

ஸ்ரீ ஆர். என். சிங்தேவ் பிறப்பால் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர். ஸெரையகல்ல சமஸ்தான மன்னருக்கு இரண்டாவது புதல்வராகப் பிறந்தார். ஆனால் பட்னா சமஸ்தானத்துக்குத் தத்துப் போனார். அதனால் அவரைப் பட்னா மகாராஜா என்றே அழைப்பார்கள். பட்னா சமஸ்தானத்தின் முக்கிய நகரம் பாலங்கீர். ஆகவே இவரை ''பாலங்கீர் ராஜா'' என்றும் அழைப்பார்கள்.




ஒரிஸ்ஸாவின் கிழக்குப் பகுதியில் பல குட்டி சமஸ்தானங்கள் இருந்தன. அந்தச் சமஸ்தானங்களில் எல்லாம் வைத்து மிக முன்னேற்றம் கண்ட ராஜ்யம், பல சீர்திருத்தங்கள் பெற்ற ராஜ்யம் என்று பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலேயே பெயர் எடுத்த ராஜ்யம் பாலங்கீர் சமஸ்தானம். இதற்கெல்லாம் ஆர். என். சிங்தேவ் அவர்களின் கூர்த்த மதியும், பரந்த உள்ளமும், ஜனநாயகப் பண்புமே காரணமாக இருந்தன. இன்றும் அப்பகுதி மக்கள் அவரைத் தெய்வமெனப் போற்றி வருவதைப் பார்க்கலாம்.

ஆர். என். சிங்தேவ் அரச பரம்பரையில் பிறந்தாலும் சாதாரணப் பிரஜை போல் கல்வி பயின்று வளர்ந்திருக்கிறார். ஆஜ்மீரிலும், ஹஸாரிபாக்கிலும் அவர் கல்வி பயின்றார். அவர் கல்விப் பயிற்சி பெற்ற இடங்களில் மிகக் கூர்த்த மதி படைத்த மாணவர் என்று பெயர் எடுத்திருந்ததால், பீஹாரில் உள்ள பட்னா சர்வகலாசாலை, அவர் தமது இல்லத்திலிருந்து படித்தே பி. ஏ. பரீட்சை எழுத அனுமதித்தது.

பிரிட்டிஷார் இந்தியாவை ஆண்ட காலத்தில் அவர் தமது சமஸ்தானத்தில் ஆட்சிப் பொறுப்புக்கு வந்ததும் செய்த முக்கிய பணிகள் பாலங்கீரில் ஒரு முதல்தரமான கல்லூரியும், விவசாய ஆராய்ச்சிக் கழகமும் சமஸ்தானம் முழுதிலும் ஏராளமான பள்ளிகளும் தொடங்கியதுதான். இதிலிருந்து அவர் எப்படிப்பட்ட சீர்திருத்தவாதியாக விளங்கினார் என்பதை ஊகிக்கலாம்.

பாரதம் சுதந்திரம் பெற்று, சமஸ்தானங்கள் இந்திய யூனியனில் இணைய வேண்டும் என்று பட்டேல் முயற்சி எடுத்த போது, முதலில் அதற்கு இசைந்தவர் ஆர். என். சிங்தேவ்.

பின்னர் தாம் பிறந்த ஸெரையகல்ல ராஜ்யத்தை ராஜ்ய சீரமைப்புத் திட்டத்தின் கீழ் பீகார் ராஜ்யத்துடன் இணைக்க ஏற்பாடானபோது, போர்க் கொடி தூக்கிச் சிறைவாசமும் ஏற்றார். பிறந்த ஊர் அபிமானம் அப்படி!

ஒரிஸ்ஸா ராஜ்யத்துடன் இணைந்துவிட்ட பழைய சமஸ்தானங்களில் வாழ்ந்த மக்களின் நலன்கள் புறக்கணிக்கப்படுவதைக் கண்ட ஸ்ரீ ஆர். என். சிங்தேவ் அவர்கள் 'கணதந்திர பரிஷத்' என்று ஒரு கட்சியைத்

தொடங்கினார். அது காங்கிரசுக்கு எதிராகத் தொடங்கப்பட்ட கட்சியாயினும், காங்கிரஸுக்குச் சமமாகப் பலம் பெற்றுவிட்டது. 1957ல் காங்கிரஸ், கணதந்திர பரிஷத், கம்யூனிஸ்ட் கட்சி ஆகிய மூன்றுமே ஏறத்தாழச் சம பலம் பெற்றுவிட, எதுவுமே ஆட்சிபீடம் ஏற முடியாத நிலை ஏற்பட்டது. நுட்ப ராஜதந்திர அறிவு பெற்றஆர்.என்.சிங்தேவ் காங்கிரசுடன் கூட்டுச் சேர்ந்து ஹரே கிருஷ்ண மெஹ்தாப் தலைமையில் மந்திரி சபை அமைந்து, தாம் நிதி மந்திரியாகப் பணியாற்றினார்.

1959ல் ராஜாஜி சுதந்திரக் கட்சி தொடங்கியதும், அதன் வளர்ச்சியைக் கூர்ந்து கவனித்து வந்த ஆர். என். சிங் தேவ், தாம் ராஜாஜியுடன் சேர்ந்து பணியாற்றுவது தான் தேசநலனுக்கு உகந்தது என்று உணர்ந்தார். 1961 இறுதியில் கணதந்திர பரிஷத் கட்சியைச் சுதந்திரக் கட்சியுடன் இணைத்து, ஒரிஸ்ஸாவில் சுதந்திரக் கட்சியின் நீல வர்ண நட்சத்திரக் கொடியைப் பட்டொளி வீசிப் பறக்கச் செய்தார். சுதந்திரக் கட்சி ஒரிஸ்ஸாவில் 1962லிருந்து 1967வரை முக்கிய எதிர்க் கட்சியாகத்தான் பணியாற்ற முடிந்தது.



பிரதான் (உதவி முதன் மந்திரி)

ஆனாலும் அவரது சலியா உழைப்பினாலும் அமைதியான முயற்சியாலும் இன்று 1967ல் சுதந்திரக் கட்சி ஜன காங்கிரஸின் உதவியுடன் ஆளும் கட்சியாக உருவாகியிருக்கிறது. ஜன காங்கிரஸ் கட்சியின் தலைவர் பிரதான் இன்று ஆர். என். சிங் தேவ் மந்திரி சபையில் உதவி முதன் மந்திரியாகப் பணியாற்றுகிறார். ஆர். என். சிங் தேவ் (ராஜேந்திர நாராயண சிங் தேவ்) அரசகுடும்பத்தில் பிறந்தவராயினும், ஆடம்பரம் என்ற பேச்சே அறியாதவர்; அடக்கமே உருவானவர். முதல் எதிர்க் கட்சித் தலைவராகச் சட்டசபையில் பணியாற்றியபோது கடுமையான ஆத்திரமூட்டும் வார்த்தைகளை எப்போதுமே உதிர்த்ததில்லை. ஆனாலும் ஆளும் கட்சியினர் வாயடைத்துப் போகும் வகையில் அவர்களுடைய குற்றம் குறைகளை அழுத்தம் திருத்தமாக அமைதியான குரலில் எடுத்துச் சொல்லுவார். அன்பும் பண்பும் நிறைந்தவர். பெருந்தன்மையின் உறைவிடம்.

இப்போது சொல்லுங்கள். ஸ்ரீ ஆர். என். சிங்தேவ் போன்ற எளிமையான, திறமையிலும் ஒழுக்கத்திலும் சிறந்த சில மகாராஜாக்கள் சுதந்திரக் கட்சியில் சேர்ந்திருப்பது ஒரு குறையா? —எஸ். வி. எஸ்.

## மாஜி மந்திரி வேர்க்கடலை விற்கலாம்!



ஆதாரம் : அமிர்தபஜார் பத்திரிகா

தகவல் : ச. ஸ்ரீதரன்

சமீபத்தில் நடந்த பொதுத் தேர்தலில் இரு தொகுதிகளில் போட்டியிட்டு இரண்டிலுமே தோல்வியடைந்த பீகார் பழைய முதல் மந்திரி சகாய்க்குத் தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்டவுடன் 600 வேர்க்கடலைப் பொட்டலங்கள் பரிசாகக்கிடைத்தன! கூடவே ஒரு கடிதமும் வந்தது. அதில், ''இந்த வேர்க்கடலைப் பொட்டலங்களை விற்று உங்களுடைய தற்போதைய பண முடையைச் சமாளித்துக் கொள்ளவும்'' என்று எழுதப்பட்டிருந்தது! இதை அனுப்பியவர்கள் யார் தெரியுமா? பீகார் மாநில என். ஜி. ஓ.க்கள். சகாய் முதல் மந்திரியாக இருந்தபொழுது பீகார் மாநில அரசாங்க ஊழியர்கள் சம்பள உயர்வு கேட்டுப் போராடினார்கள். அப்பொழுது சகாய், ''உங்களுக்குச் சம்பளம் போதவில்லை யென்றால், அதிக இலாபம் கிடைக்கும் வேர்க்கடலை வியாபாரத்தைக் காரியாலய நேரம் போக மற்ற சமயங்களில் மேற்கொண்டு பண முடையைச் சமாளித்துக் கொள்ளுங்கள்'' என்று போதிக செய்தார்! அதன் எதிரொலியாகத்தான் இவருக்கே வேர்க்கடலை யோசனை கூறப்பட்டது!






● **தராசு படிக்கல்லுடன் பழைய பேப்பர் வாங்கக் கிளம்புபவர் அல்ல! ஓர் அரிய கலைப் பொக்கிஷத்தைத் தேடிப் பிடித்துப் பாதுகாத்து வரும் பெரிய காரியத்தைச் சாதித்திருப்பவர்!**

**கா**ந்தி என்றதும் கங்கை நினைவும், காந்தி என்றதும் அஹிம்சைத் தத்துவமும் மனத்தில் உடனடியாகத் தோன்றுவது போல், சமீப நாட்களாக எனக்கு, 'பட்டாபிராமன்' என்றதும், பழைய பேப்பர்கள், சஞ்சிகைகள் ஞாபகம் 'பட்' என்று தோன்றி விடுகிறது. அவரைச் சந்திக்கும்போதெல்லாம், 'அங்கே சொல்லி வைத்திருக்கிறேன், இங்கே தேடிப் பார்க்கிறேன்' என்று சொல்லி நழுவுகிறேன்.

எனினும், பழைய பேப்பர் வாங்கத் தராசு படிக்கல்லுடன் கிளம்பும் நபர் அல்ல திரு பட்டாபிராமன்! தமிழில் ஆதி நாள் முதல் இன்றுவரை தோன்றியிருக்கும் பத்திரிகைகள், சஞ்சிகைகள் முதலியவற்றைத் தேடிப் பிடித்துக் கலைப் பொக்கிஷமாக, ஒவ்வொரு பிரதியையும் காப்பாற்றிப் பார்த்து ரசிக்க வேண்டும் என்ற கொள்கையுடையவர் இளைஞர் பட்டாபிராமன்' இந்த ஆர்வத்தின் வித்து அவருக்குப் பள்ளி நாட்களிலேயே முளைகட்டி விட்டது. அதற்கு உரமாக இருந்தது அறந்தாங்கியிலிருக்கும் அவருடைய மாமாவின் பலசரக்குக் கடைத் தராசு!

ஆம்! பலசரக்குக் கடையில் சாமான்கள் கட்டிக் கொடுப்பதற்காகப் பழைய பேப்பர்கள் வாங்கிப் போடுவார்களல்லவா? மாமா, ஊர்க்காரர்களிடம் அப்படி வாங்கித் தராசில் நிறுத்துத் தள்ளும்போது மாணவன் பட்டாபிராமன் கண்களில் வண்ண அட்டைகளுடன் புது மெருகு அழியாமல் வந்து குவியும் பல சஞ்சிகைகள் படும். அவைகளையெல்லாம் ஒழுங்குபடுத்தி அழகு பார்ப்பார். ஏன், மற்ற சில மாணவர்கள் தபால் தலைகள் சேகரிப்பது போலவும், தீப்பெட்டிப் படங்கள் சேர்ப்பது போலவும் தான் பத்திரிகைகள், சஞ்சிகைகள் முதலியவற்றைச் சேர்க்கக் கூடாது என்ற ஆசை தோன்றியது. அந்த ஆசை ஆர்வமாக வளர்ந்து நிற்கிறது. மாமாவுக்கு இதனால் சில கிலோகிராம் பத்திரிகைகள் நஷ்டமாகப் போனாலும் மருமகனுக்குப் பல அநுபவங்கள் லாபமாயின!



'பாரதியாரின் 'இந்தியா' பத்திரிகையின் ஒரு பிரதி மாதிரிக்குக் கிடைக்காதா, அது தம் சேகரிப்பில் இடம் பெறுமா?' என்று ஏங்கிக் கொண்டிருந்த பட்டாபிராமனுக்கு அவர் நண்பர்கள், பரலி. சு. நெல்லையப்பரைப் பற்றிச் சொல்லி அவரிடம் போய் விசாரிக்கச் சொன்னார்கள்.

குரோம்பேட்டைக்குப் பக்கத்திலிருக்கும் பாரதியாரின் பழைய நண்பர் நெல்லையப்பர் இருப்பிடத்தை இவர் அடைந்தபோது மாலைப் பொழுது முன் இரவாக மாறி விட்டிருந்தது. நெல்லையப்பர் ஜாகையில் மின்விளக்கு வசதியில்லை. தள்ளாத வயதில் அவரே அங்கு பலவித சிரமங்களுடன் வசித்து வருகிறார். ஆனாலும் அவர், ''தம்பி! பழைய 'இந்தியா' பிரதிகளை யெல்லாம் பத்திரமாக அதோ அந்தப் பெட்டியில் வைத்திருக்கிறேன். அதைத் திறந்து பார்த்து ரொம்ப நாளாகி விட்டது. இந்த இருட்டிலே அங்கே எல்லாம் கைவைக்க வேண்டாம். நீங்க இங்கேயே ராத்திரிப் பொழுதைக் கழிச்சுட்டுக் காலையிலே பத்திரிகையோடே ஊருக்குத் திரும்பலாம்'' என்று உபசரித்தார்.

ஒரு பிரசித்தி பெற்ற, காணக் கிடைக்காத பத்திரிகைப் பிரதி கிடைக்கவிருக்கிறதே என்ற குதூகலம் பட்டாபிராமனுக்கு.

மறு நாட் காலையில் அந்தப் பொக்கிஷப் பெட்டி திறக்கப்பட்டது. இருவருக்குமே தலையைச் சுற்ற வைக்கும் நிகழ்ச்சி உள்ளே நடந்து விட்டிருந்தது. அந்தப் பெட்டியிலிருந்த அனைத்தையுமே, கரையான் படையெடுத்து விழுங்கிவிட்டுத் தன் சந்ததிகளுடன் குடியேறி யிருந்தது! மாதிரிக்கு ஒரு பேப்பர்த் துண்டுகூட இல்லை!

அண்ணாமலை சர்வ கலாசாலையைச் சேர்ந்த தொழிற் பள்ளியில் இவர் பொறி இயல் துறை மாணவராக இருந்தபோது, தம் முயற்சி வெளி உலகத்துக்கும் தெரிய வேண்டும் என்று விரும்பினார். சர்வ கலாசாலை நிர்வாகிகள் இவருடைய முயற்சியைக் கண்டு பாராட்டி, இவர் அதுவரை சேகரித்த பத்திரிகைகளைக் கொண்ட ஒரு கண்காட்சி நடத்த உதவி செய்தார்கள். டாக்டர் சி. பி. ராமசாமி ஐயர் நூலகத்தில் மூன்று நாட்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்ட இந்தக் கண்காட்சி, மாணவர்களின் வேண்டுகோளினால் ஏழு நாட்கள் வரை நீடிக்கப்பட்டது. அறுநூற்று ஐம்பதுக்கு மேற்பட்ட தமிழ்ப் பத்திரிகைகள், சஞ்சிகைகள் அங்கே இடம் பெற்றிருந்தன. சிறுவர் ஏடுகள், மகளிர் ஏடுகள், அரசியல் ஏடுகள் என்ற ரீதியில் பல பகுதிகள் உருவாக்கப் பட்டிருந்தன.

தாம் சேர்த்த பத்திரிகைகளுக்கெல்லாம் முழு விவரத்துடன் ஓர் அட்டவணைப் புத்தகம் தயாரித்து, கண்காட்சி நடக்கும் வேளையில், குறைந்த விலைக்கு விநியோகிக்கத் திட்டமிட்டார். தயாராக அந்த அட்டவணையைக் கையெழுத்துப் பிரதியாக எழுதி வைத்துக்கொண்டு, கல்லூரியிலிருந்து கிடைக்கவிருக்கும் 'ஸ்காலர்ஷிப்' பணத்துக்காகக் காத்திருந்தார். பேப்பருக்கும் அச்சுக் கூலிக்கும் பணம் வேண்டாமா?

விபரீதமாக இந்தக் காட்சி முடிந்து சில நாட்கள் வரை அந்தப் பணம் கைக்கு வரவில்லை. ஆனால் பணம் வந்தபோது இந்த அட்டவணை ஆசை அவரை விட்டு முழுதும் அகலவில்லை. தம்முடைய தேவைகளை மறந்து, தம் குடும்ப நிலையை மறந்து, கிடைத்த பணத்தை வீசி அழகாகத் 'தமிழ் ஏடுகள் வழிகாட்டி' என்ற அட்டவணையை ஆயிரம் காப்பிகள் அச்சடித்துக் கட்டி எடுத்துக் கொண்டு வந்தார். கண்காட்சி நடக்கும்போது இந்த அட்டவணை கண்களில் தென்பட்டிருந்தால் பார்வையாளர்கள் பரவசத்துடன் வாங்கியிருப்பார்கள்! ஆனால் நடந்து முடிந்து போன கண் காட்சியை இப்போது கிடைக்கும் அட்டவணையுடன் இணைத்துப் பார்க்க யாருக்குத் தோன்றும்? ஆகவே, எழுபத்தைந்து பைசா விலையிடப்பட்ட அந்த அட்டவணைப் புத்தகம் எழுநூற்றி ஐம்பதுக்கு மேலாகவே நண்பர் பட்டாபிராமனுடன் உறவு கொண்டாடித் தங்கிவிட்டது. பட்டாபிராமன் இதற்கெல்லாமா அஞ்சுகிறார்? ஹைஹாம்!



திரு பட்டாபிராமன்

''இந்த இரண்டு வருஷ காலத்தில் எத்தனையோ புதுப் பத்திரிகைகள் தோன்றியிருக்கின்றன. என் கைக்குப் பல அபூர்வ பழைய பத்திரிகைப் பிரதிகளும் கிடைத்திருக்கின்றன. இவைகளுக்கெல்லாம், இப்போது மேலும் விரிவான தொகுப்பு அட்டவணை தேவை. அதை இப்போது எழுதிக் கொண்டிருக்கிறேன். அடுத்த தடவை எங்காவது இந்தக் கண்காட்சிக்கு வசதி கிடைத்தால் அப்போது இந்தப் புது அட்டவணையும் கிடைக்கும்'' என்று சொல்லும் பட்டாபிராமன், கட்டுக் கட்டாக இருக்கும் வெள்ளைக் கார்டுகளை எடுத்துப் போட்டார். அவற்றில் ஒவ்வொரு பத்திரிகையையும் பற்றிக் குறிப்புக்கள் எழுதி வைத்துள்ளார்.

''ஐம்பது வருடங்களில் தமிழ் நடை, சித்திரம் வரையும் முறை, அச்சு அமைப்பு எல்லாம் எப்படிப் படிப்படியாக மாறி வந்திருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ள என்னிடமுள்ள பத்திரிகைகளை வரிசையாகப் பார்த்தால் போதும். சமூக வளர்ச்சி, மாறுதல்கள் இவைகளுக்கு இது அளவுகோல் இல்லையா?... எனக்கு இன்னும் வசதி கிடைக்கும்போது எல்லா மொழிப் பத்திரிகைகளையுமே சேர்க்க விரும்புகிறேன்'' என்கிறார் பட்டாபிராமன்.

பிளாட்பாரங்களில் பழைய பேப்பர்க் கடைகளில் எங்கு ஓர் அபூர்வ சஞ்சிகை கிடைத்தாலும், கையிலிருக்கும் சில்லறையைக் கொடுத்து வாங்கிவிட்டு அப்புறம் பஸ்ஸுக்கோ, டிபனுக்கோ சில்லறை குறைந்து தடுமாறுவது இவருக்குப் பழக்கமாகி விட்டது. ஆனால் முப்பது வருடங்களுக்கு முன்னால் தோன்றி மறைந்து விட்ட ஒரு சஞ்சிகையின் இதழ் கிடைத்துவிட்டால் மூன்று கப் காப்பி சேர்ந்தாற்போல் குடிக்கும் ஆனந்தம் இவருக்கு ஏற்படுகிறதே! அவர் சேகரிப்பும் ஆயிரத்தை எட்டும் தறுவாயில் இருக்கிறது!

திருவல்லிக்கேணி ஹை ரோட் முருகேச நாயக்கர் மாளிகையில் அறை எடுத்துத் தங்கி மராமத்து இலாக்காவில் வேலை பார்க்கும் இவருக்கு அறைத் தோழர்கள் மூன்று பேர். ஆனால் துணைக்கு இருக்கும் பழைய சஞ்சிகைகள், பேப்பர்களின் பெட்டிகளோ நான்கு!

''ஐயோ! பழைய காகித வாடை தாங்க வில்லையே!'' என்று நண்பர்கள் கேலி செய்வதை இவர் பொருட்படுத்துவதில்லை.

— கோமதி சுவாமிநாதன்

# படபட!





'பட் பகர்' என்று பட்டாசு வெடிக்கும் ஓசை அல்ல! புதுதில்லியில் பரவலாக உள்ள வாடகை வாகனம்.

குதிரைகள் பூட்டிய டாங்கா வண்டியில் போய்ப் பழக்கப்பட்ட டில்லிவாசிகள் வண்டியை இழுக்கக் குதிரைகளுக்குப் பதில் மோட்டார் யந்திரங்கள் வந்தும், அந்த வண்டிகளையும் டாங்காவைப் போலவே அமைத்துக் கொண்டு விட்டனர். நான்கு பேர் உட்கார்ந்து போகக் கூடிய இந்த வண்டிகளுக்கு அது பட் பட் என்று போடும் சப்தத்தைக் கொண்டு, ''பட்பட'' என்று பெயர் வைத்து விட்டனர்.

இந்த வண்டிகள் ஆட்டோ ரிக்ஷாக்களைப் போல நாம் இஷ்டப்பட்ட இடத்துக்கு ஓடுவதில்லை. ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து இன்னொரு குறிப்பிட்ட இடத்துக்கு நாலு பேர் சேர்ந்த பிறகுதான் ஓட ஆரம்பிக்கும்.

இது மோட்டார் சைக்கிள் பாகங்களைக் கொண்டு தயாரிக்கப்பட்டது போல் காணப்படுகிறது. ஆனால் மூன்று சக்கரங்களும் மேலே 'கான்வாஸ்' கூரையும் இதற்கு உண்டு.

நான் அன்று ஏறின பட்பட்வின் சொந்தக்காரர் மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டார். அவருடைய பெயர் ஹரிநாம் சிங் என்று தெரிந்து கொண்ட நான், அவர் அத்தனை உற்சாகமாகக் காணப்பட்டதைக் கண்டு அவருக்கு எத்தனை குழந்தைகள் என்று விசாரித்தேன்.

''ஐந்து'' என்றார் அவர்.

''ஐந்தா! அப்படியானால் குடும்பக் கட்டுப்பாடு செய்து கொள்ளவில்லையா?''

''இல்லை'' என்றார் ஸ்ரீ ஹரிநாம் சிங்.

''இனியாவது செய்து கொள்ளும் உத்தேசம் உண்டா?'' என்று கேட்டேன்.

''எதற்காகக் குடும்பக் கட்டுப்பாடு செய்து கொள்ள வேண்டும்? நான் நன்கு சம்பாதிக்கிறேன். குழந்தைகளை என்னால் நிர்வகிக்க முடியும். இன்னும் பிறக்கட்டுமே, என்ன தவறு?'' என்று கேட்டார்.

''இரைந்து பேசாதே. டாக்டர் சந்திரசேகர் காதில் விழுந்து வைக்கப் போகிறது'' என்றேன்.

ஐம்பத்து நான்கு வயதுள்ள ஸ்ரீ ஹரிநாம் சிங் சென்ற பதினைந்து வருடங்களாக இந்த வேலையைத்தான் செய்து கொண்டிருக்கிறார். தினம் ரூ. 35 கிடைக்கிறதாம். அதில் ரூ. 15 பெட்ரோல் செலவுக்காகப் போக மீதி ரூ. 20 மிஞ்சுகிறதாம். அந்த வண்டி வாங்க ரூ. 9,000 பிடித்தது என்றும், அதன் சொந்தக்காரர் தாம்தான் என்றும் சொன்னார்.

''மீட்டர் பொருத்தியுள்ள ஆட்டோ ரிக்ஷாவில் போவதை விட, மீட்டர் இல்லாத பட்பட்வில் போவதை ஜனங்கள் விரும்புகிறார்களா?'' என்று கேட்டேன்.

''விரும்பாமல் என்ன! சர்க்கார் காரியாலயங்கள், சுப்ரீம் கோர்ட், கானட் பிளேஸ், ரயில்வே ஸ்டேஷன் போன்ற குறிப்பிட்ட இடங்களுக்குக் குறிப்பிட்ட வாடகைதான் வைத்திருக்கிறோம். அகவே ஜனங்கள் இந்தப் பட்பட்களை விரும்புகிறார்கள். அதோடு நான்கு பேர் சேர்ந்து ஒரு குடும்பமாகப் போக வேண்டும் என்றால் எங்கள் பட்பட்கள்தான் அநுகூலம்'' என்று பதில் வந்தது.

''ஆமாம், நல்ல வரும்படி வந்துகொண்டிருக்கிறது என்கிறாயே, உன் குழந்தைகளையும் இதே தொழிலில் விடுவாயா?'' என்று கேட்டேன்.

''அதை யார் இப்பொழுதே சொல்ல முடியும்? எல்லோரும் படித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் உத்தியோகமாக இருந்தால்தான் எனக்குத் திருப்தியாயிருக்கும்'' என்று ஸ்ரீ ஹரிநாம் சிங் பதிலளித்தார்.

இதற்குள் நான்கு பேர்கள் சவாரி சேர்ந்துவிடவே, பட்பட, பட், பட் என்று கிளம்பி விட்டது.



# ஜிம்மி

வால்ட் டிஸ்னி


ஜாலி...ஜாலி... ஜாலி!


நான் ரொம்ப அதிர்ஷ்டக்காரன்!


விடுமுறையை அனுபவிக்கிறதுன்னு வந்தா...


எல்லாம் கச்சிதமாச் செய்துடுவேன்


கோடை காலத்துக்கு ஏற்றபடி இதோ என் வீடு ரெடி!


நீலக் கடலின் அழகை நிம்மதியாப் பார்க்கலாம்.


நினைச்சால் கடலில் குதித்து நீச்சல் அடிக்கலாம்...


...சுவாரசியமான நேரங்கள்...
© 1966 Walt Disney Productions World Rights Reserved


...பரந்து விரிந்துள்ள நீ...
7-10


...பசிக்கு ருசிக்கும் பக்குவமான உணவு...


ஆனால் ஒரே ஒரு குறை தான்...


பேரலை வந்துடுச்சுன்னா மட்டும் பயமாம்...
வால்ட் டிஸ்னி



# மங்கள மாகாத்மியம்

"டிமிடெ, டிமிடெ, டிமிடெ, டிமிடெ"

வாய்ச் சொல்லுக்கேற்பச் சிப்ளாக் கட்டை ஒலிக்கிறது; தம்பூரா சுருதி சேர்க்கிறது; மிருதங்கம் பேசுகிறது.. பின்பாட்டுக்காரரின் குரலும் ஒத்துழைக்கிறது.

பிறகு....?

உருமால் முகத்தைத் துடைக்க, ஏல மணத்தோடு சீனிக் கற்கண்டும் கிராம்பும் வாய்க்குள் செல்ல, கையில் உள்ள சிப்ளா ஜாலரா வாக மாறுகிறது. இதோ, மங்கள சுலோகத்தோடு ஹரிகதா காலட்சேபம் ஆரம்பமாகி விட்டது!

இந்த ஹரிகதா சிரவணத்தினால் என்ன பயன்?

கபீர்தாஸர் கூறுகிறார்:

"ஆண்டவனிடம் அன்பு வைக்காதே. அதைக் காட்டிலும் ஆண்டவனின் அடியார்களிடம் அன்பு வை. ஏனெனில், ஆண்டவன் நிலமும் நிதியமும் மட்டுமே தருவான். அவனது அடியார்களோ ஆண்டவனையே அருள்வார்கள்."

ஹரிகதை பிறந்தது மகாராஷ்டிரப் பிரதேசத்தில்தான் என்றாலும் வளர்ந்தது நமது தமிழகத்தில்தான். நாளொரு கதையும் பொழுதொரு பாணியுமாக வளர்ந்து தமிழ் மண்ணின் செல்வமாக இன்று இக்கலை விளங்குகிறது. அதெல்லாம் சரிதான், 60-61ல் உயர்நிலைக் கல்விபெற்றுத் தட்டெழுத்திலும் தேர்ந்து தஞ்சை கலெக்டர் ஆபீஸில் குமாஸ்தாவாகப் பணியாற்றி வந்த குமாரி மங்களம் ஹரிகதைத் துறைக்கு வந்தது எப்படி?

இந்தக் கேள்விக்கு விடை: பாரம்பரியம், பூர்வஜன்ம வாசனை.

தமிழ்த் தெலுங்குக் குடியிலே பிறந்தவர் மங்களம். இவரது தந்தை வேங்கடசுப்பிரமணிய ஐயர் பஜனை சம்பிரதாயங்களில் ஊறித் திளைத்தவர். அதோடு இவரது மூதாதையர்கள் இல்லறத்தை நல்லறமாக நடத்திப் பிறகு துறவறத்தை மேற்கொண்டு ஆத்மிகத் துறையை நாடியவர்கள். தாய் வழியைச் சேர்ந்தவர்களும் பாகவதமேளாவுக்குப் புகழ்பெற்ற மெலட்டூரைச் சேர்ந்தவர்கள்.

எனவே, ஹரிகதைக்குத் தேவையான இசையறிவு, பக்தி உணர்வு, பாவ அபிநயத் திறன், சொல் வன்மை போன்றவை இவர் ரத்தத்தில் தாமாகவே ஊறியுள்ளன.

1963ம் ஆண்டு அறநிலையத் துறையினரின் ஆதரவில், ஹரிகதையில் வல்லுநரான திருவையாறு ஸ்ரீ அண்ணுசாமி பாகவதரைப் பிரின்சிபாலாகக் கொண்டு ஹரிகதைக் கல்லூரி ஒன்று தஞ்சையில் தொடங்கப்பட்டது. விட்டகுறை தொட்ட குறையாக ஆர்வம் பற்றிக் கொள்ளவே, குமாரி மங்களம் வேலைக்கு முழுக்குப் போட்டுவிட்டு இக்கல்லூரியில் சேர்ந்தார். இவரோடு சேர்ந்து பத்து மாணவ மாணவிகளுக்கு மூன்றாண்டுகள் பயிற்சி அளிக்கப்பட்டது.

என்ன என்ன பயிற்சி? இந்தக் கேள்விக்கு மூலக் கதையிலே ஓர் உபகதையைச் செருகினால்தான் விளங்கும்!

நிரூபணம்: அதாவது ஒரு ஹரிகதையை எப்படித் தொடங்குவது, என்ன என்ன சுலோகங்களை எங்கே எங்கே கூறுவது, எப்படி எப்படிக் கூறுவது? பொருள் கூறுவது எப்படி? — அடி, இடை, முடி — இம்மூன்றையும் முன்கூட்டியே ஒரு திட்டம் வகுத்துக் கொண்டு பிறருக்குப் புரியும்படியாகக் கூறத் தெரிய வேண்டுமே, அது எப்படி? இவ்வழியைப் புகட்டியவர் ஸ்ரீ கிருஷ்ண பாகவதர்.

சங்கீதம்: நாதோபாசனை என்பது அரிய வஸ்து. நாதத்தின் மூலம் ராகம், ராகத்தின் மூலம் பாவம், பாவத்தின் மூலம் மனக் கிளர்ச்சி, அதன் மூலம் லயிப்பு. இப்படியாக நாதத்தை உபாசித்தவர்கள் அதைப் பிரும்மமாகக் கண்டிருக்கிறார்கள். எந்த எந்த ராகங்கள் மனத்தில் என்ன என்ன உணர்ச்சியை எழுப்பக்கூடும், கீர்த்தனைகளையும் பாடல்களையும் எப்படி பாவபூர்வமாக இசைக்க வேண்டும்? இதை யெல்லாம் கற்றுத் தந்திருக்கிறார்கள் இந்தக் கல்லூரியில். இந்த இசை ஞானத்தை அளித்த பெருமை பொழுகுடி ஸ்ரீ கணேசன் அவர்களைச் சாருகிறது. நீலாம்பரி பாடித் தூங்க வைக்கலாம். பூபாளம் பாடி எழுப்பலாம். கானடா பாடி உருக்கலாம் — இப்படிப் பல ராகங்களின் இயல்புகளைப் பாடிக் காட்டி உணர்த்தியவர் அவர்.

இலக்கியம்: இதிகாசம், புராணம், காவியம் — இவற்றில் தீர்மானமான அறிவு இல்லாமல் ஹரிகதை சொல்ல முடியாது. வடமொழி, தென் மொழி மட்டும் அல்ல; பல மொழி இலக்கியங்களிலும் காணும் சிறப்பை உணர்ந்திருக்க வேண்டும். மூலக் கதைகளுக்கிடையே எந்த எந்த உபகதைகளைச் சேர்க்க

லாம், எப்படிச் சேர்க்கலாம் என்பதைப் போதித்தவர் இக்கல்லூரியின் தலைமை ஆசிரியரும், வடமொழி — தென்மொழியில் ஆற்றல் பெற்றவருமான சிரோமணி ஸ்ரீ ஏ. எஸ். ரங்கநாதாச்சாரி அவர்கள்.

இப்படியாக, ஹரிகதை பயிலும் மாணவ மாணவியருக்குப் போதித்ததோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல் அவர்களைக் கொண்டு பயிற்சிக் காலத்திலேயே ஹரி கதை செய்யவும் பயிலுவித்திருக்கிறார்கள்.

1963ம் ஆண்டில் திருவெண்காட்டில் 'சீதா கல்யாணம்' செய்த இவர் 1964ம் ஆண்டு மதுரையில் 'ஹரிகதாம்ருதவர்ஷிணி' என்று ரசிகப் பெருமக்களால் பட்டம் சூட்டப்படும் அளவுக்கு உயர்ந்திருக்கிறார். இன்று வரை இருநூறுக்கு மேற்பட்ட இடங்களில் ஹரிகதை செய்திருக்கும் இவர், தமிழ் நாடு சங்கீத நாடக அகாதமியினர் இளம் கலைஞர்களுக்காக நடத்திய போட்டியில் முதல் பரிசைப் பெற்றிருப்பதோடு அஹோபிலம், ஸ்ரீ காஞ்சி ஆகிய ஆசாரிய பீடங்களில் தாம் ஹரிகதைகள் நிகழ்த்தியதைப் பாக்கியமாகவும் பெருமையாகவும் கருதுகிறார்.

பக்தியை வளர்க்கும் இந்த ஹரிகதைக் கலைக்கு இன்னொரு பெருமை என்ன தெரியுமா? பரத்துவ நிலையில் உயர்ந்து விட்டவர்களுக்கு எம்மதமும் சம்மதம் போல, இதற்கு எம்மொழியும் சம்மத மொழியாகும். மொழி வேறுபாடின்றி இந்த ஹரிகதைக் கலை தேசிய, கலாசார ஒற்றுமைக்கும் பணி புரிகிறது.

''வைஷ்ணவ ஜனதோ தேனே கஹியே
ஜே பீட் பராயீ ஜானீரே''

''பிறர் வருத்தம் அறிந்தவன்தான் உண்மையான வைஷ்ணவன். அதாவது பகவானின் பக்தன்.'' — காந்தியடிகளுக்குப் பிரியமான குஜராத்திக் கவிஞர் நர்சிமேத்தா இடம் பெறுவார் ஒரு சமயம்.

''தூமி பந்து, தூமி நாத், நிச தின் தூமி அமார்''

'நீயே உறவினன், நீயே எசமானன், இரவு — பகல் எந்நேரமும் நீயே எங்கள் துணைவன்' என்று கூறும் வங்காளக் கவி கைகொடுப்பார், இன்னொரு சமயம். அவரைத் தொடர்ந்து,

''பண்ணேன் உனக்கான பூசையொரு
வடிவினிலே''

என்று தாயுமானவர் முன் வந்து நிற்பார்.

இப்படியாக ஹரிகதை நடக்கும் இடங்களில் எல்லாம் கன்னடக் கவி புரந்தர தாஸர் என்ன, ஆந்திரக் கவி வேமனு என்ன, மற்றும் சூரதாஸர், கபீர்தாஸர், துளஸிதாஸர், மீராபாயி, ஆண்டாள், கனகதாஸர், ராமதாஸர், துகாராம், ஏகநாதர், ஞானேசுவர் என்று பலரும் 'நான், நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு கரம் நீட்டி உரம் சேர்க்க முன்வருவார்கள். எனவே, மொழி மறைந்து பொருள் தலை தூக்கி நிற்கும்.

இந்த ஹரிகதை தேசிய ஒற்றுமையையும் மொழி ஒருமைப்பாட்டையும் கற்றுத் தருவதோடு, நாலு பேர்களோடு எப்படி ஒத்துப் போக வேண்டும் என்ற அறிவுரையையும் வெகு அழகாக வழங்குகிறது.

இதற்கான மங்கள விளக்கத்தைப் பாருங்கள் :

''பெண்ணான எனக்கோ இரண்டு கட்டை சுருதி. என் பின்பாட்டுக்காரருக்கோ நாலு கட்டை சுருதி. அவர் ஒரு கட்டை குறைத்துக் கொண்டு, நான் ஒரு கட்டையை ஏற்றிக் கொண்டு பாடுவது என்று உடன்பாடு செய்து கொண்டால்தான் எங்கள் இசை நிறக்கும்.

''அடுத்தபடியாக இந்த மிருதங்கம் இருக்கிறதே, இது ஹரிகதைக்குப் படுமுக்கியமானது; கதையைச் சிறப்பாக எடுத்துக் காட்டக் கூடியது. ஏழுடி நடை, உசி நடை என்னும் வகையிலே உசி நடைதான் இதற்குப் பிரதானம். ஏனெனில், ஹரிகதை சொல்லுபவர் இடையிடையே பாட்டோடு விளக்கங்களும் கூறவேண்டியிருக்கிறதல்லவா?

---

கன்னியமாகவும் அடக்கமாகவும் தோன்ற வேணுமானாலும் சரி, கவர்ச்சிகரமாக விளங்க வேணுமானாலும் சரி இந்த ஒரே ஆடையை இரண்டுவிதமாகவும் பயன்படுத்தலாம். மூழங்கால் வரை அணியும் கவுனின் உயரத்தைக் குறைக்க விரும்பினால், ஒரு 'ஜிப்பை' இழுத்தால் போதும், ஒரு பகுதி கழன்று கையோடு வந்துவிடும்; கவுனின் உயரம் குறைந்து கவர்ச்சி அதிகமாகும். ஜெர்மனியில் இவ்வித ஆடைகள் மெல்லிய ரகத்தோலில் எழுபத்தி நான்கு வண்ணங்களில் தயாரிக்கப்படுகின்றன.



மிருதங்கக்காரர்கள் உசி நடையில் தேர்ந்தவர்களாக இருந்து விட்டால், 'சாப்' கொடுத்து ஹரிகதையை மேலும் களை கட்டச் செய்து விடுவார்கள். அவர்கள் இடையிடையே கொடுக்கும் 'மோரா'க்கள் ஜனரஞ்சகமாக அமையும். சுருங்கச் சொல்லப் போனால் ஹரிகதைக்குப் பின்பாட்டுப் பாடுபவர்களும், மிருதங்கம் வாசிப்பவர்களும் நாலும் தெரிந்தவர்களாக அமைய வேண்டும். ஹரிகதை செய்பவர்களும், சரஸ்வதி, மீனாட்சி, காமாட்சியாக இருக்க வேண்டும்.''

''என்ன புதிர் போடுகிறீர்கள்?''

''இதில் புதிர் ஏதும் இல்லை. 'கற்றது கைம்மண் அளவு; கல்லாதது உலகளவு' என்று சரஸ்வதி தேவியே புஸ்தகமும் கையுமாக இருக்கிறாள் என்று கூறுவார்களே, அது போல் ஹரிகதை சொல்பவர்களும் என்றென்றும் கற்றவண்ணம் இருக்க வேண்டும்.

''மீனாட்சி என்றால் மீனைப்போல் இருக்க வேண்டும். மீன் எப்படித் தன் குஞ்சுகளைக் கண் பார்வையிலேயே நடத்திச் செல்கிறதோ, அப்படி ஹரிகதை சொல்பவர்கள் தன் பக்கவாத்தியக்காரர்களையும் நடத்திச் செல்லும் வகையறிந்தவர்களாயிருக்க வேண்டும். கண் ஜாடையைக் கொண்டே அவர்களைத் தன் விருப்பத்தைப் புரிந்து கொள்ள வைத்து ஒத்துழைக்குமாறு பயிலுவிக்க வேண்டும்.

''காமாட்சி என்றால், சபையில் உள்ள மக்கள் என்ன விரும்புகிறார்கள், நம் கதையைக் கேட்டுக் கொட்டாவி விட வில்லையே என்பதையெல்லாம் கண்டு கொண்டு, அவர்களை ஈர்க்க வேண்டும்;''

''இந்தத் தொழிலில்......''

''வருமானத்தைக் கேட்கிறீர்களா? பொருளென்று பார்த்தால், 'உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்குத்தான் மிஞ்சும்' என்ற கதைதான். அதையே மெய்ப்பொருள் என்று கணக்கிட்டால், உழுதவன் எத்தனை பேருக்குப் பசியாற உணவு அளித்திருக்கிறான், எத்தனை பேருடைய திருப்தியைச் சம்பாதித்திருக்கிறான்! மன நிறைவு என்னும் பெருந்தனம் ஒன்று போதாதா?''

இப்படிக் கேட்கும் குமாரி மங்களம் ஹரிகதைப் பாணியிலேயே தம் பேச்சை முடிக்கிறார்:

''இதைச் சொன்னவருக்கும் சொல்ல வைத்தவருக்கும் கேட்டவருக்கும் கேட்க வைத்தவருக்கும் சர்வமங்களமும் உண்டாகட்டும் என்று எல்லாம் வல்ல பெரிய கோயிலானை — பிருஹதீசுவரனை இறைஞ்சுகிறேன்.''

நாமும் எம்பார் விஜயராகவாச்சாரியாரைத் தலைவராகக் கொண்டு இப்பொழுது நடைபெற்றுவரும் இந்த ஹரிகதைக் கல்லூரி இப்படியாகப் பல மங்களங்களைத் தயார் செய்து புகழுற வேண்டும் என்று வேண்டி மங்களம் பாடுவோமாக:

''பவமான .......... மங்களம்''

ரா. வி.

## மகத்தான மோட்டார் பந்தயம் (THE GREAT RACE)

வாழைப் பழத்தோல் சறுக்கி நடுத்தெருவில் ஒருவர் விழுந்தால், அனுதாபம் ஏற்பட வேண்டியது நியாயம். ஆனால் சிரிப்பு வருகிறது. விழுந்து விழுந்து சிரிக்கிறோம். ஏறத்தாழ இந்த நிலைதான் 'தி கிரேட் ரேஸ்' என்னும் இந்தப் படத்தைப் பார்க்கும்போது. எவ்வளவு அசட்டுத்தனங்கள்! இருந்தாலும் விலாப் புடைக்கச் சிரிப்பு வரத்தான் செய்கிறது. முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக் கொள்வதில் பட்டம் பெற்றுவிட்ட ஆசாமியானாலும் இந்தப் படத்துக்கு வந்து விட்டால் படு தோல்வி அடைய வேண்டியதுதான்!

கற்பனைக்கும் நம்புவதற்கும் எட்டாத நிகழ்ச்சிகளைப் புகுத்த மிக வாய்ப்பாக 1900ம் வருஷத்திய சூழ்நிலையைப் புறப் படலமாகக் கொண்டு கதையைப் புனைந்திருக்கிறார்கள்.

மோட்டார் கார்கள் பிரபலமாகத் தொடங்கியுள்ள காலம். நியூயார்க் நகரிலிருந்து பாரீஸ் நகரத்துக்கு ஒரு மோட்டார் கார் ரேஸ் நடக்கிறது. கதாநாயகன் லெஸ்லியாக டோனி கர்ட்டிஸ் ஒரு வெண்ணிறக் காருடன் போட்டியில் கலந்து கொள்ளுகிறார். அவரைப் போட்டியில் தோல்வியுறச் செய்ய புரொபஸர் பேட்டாக ஜாக் லெமன் கருநிறக் காருடன் புறப்படுகிறார். இந்தப் போட்டியில் கலந்து கொண்டு, தனது பத்திரிகைக்கு அவ்வப்போது செய்தியனுப்பும் பத்திரிகை நிருபராக அழகிய மங்கை நடலீவுட் நடிக்கிறார். நியூயார்க்கிலிருந்து பாரீஸ் போய்ச் சேருவதற்குள் பலப் பல அற்புத நிகழ்ச்சிகள், காதல் காட்சிகள், ஹாஸ்யச் சம்பவங்கள் நிகழ்கின்றன. இரண்டு மணி நேரம் ஒரு விசித்திர உலகுக்குப் போய் வயிறு விட்டுப் போகச் சிரிக்க வேண்டுமானால் சென்னை ஸபையர் தியேட்டரில் நடக்கும் 'தி கிரேட் ரேஸ்' படத்தைத் தவற விடக் கூடாது.




வெள்ளி விழா மூன்றாவது பரிசு நாவல்
பி.வி.ஆர் எழுதும்
மணக் கோலம்
கல்கி
புத்தாண்டு இதழில் ஆரம்பமாகிறது

ஒருவர் தம்முடைய மணிவிழாவைக் கொண் டாடிக் கொண்டாலோ, அல்லது ஒரு கிரிக்கெட் ஆட்டக்காரர் நூறு ஓட் டங்கள் போட்டாலோ, பெருமைப்படத்தக்க வகையில் பாராட்டுதல்கள் கிடைக்கையில் ஒரு புத்தக நிறுவனம் தனது ஐந் நூறாவது புத்தகத்தை வெளியிடும்போது பெரு மைப்பட்டுக் கொள்ள அதற்குத்தான் உரிமை யில்லையா? பாராட்டத் தான் நாம் தயங்கு வோமா?




இந்தப் பெருமைக்கும் பாராட்டுதல் களுக்கும் பாத்திரமா யிருக்கும் நிறுவனம் சென்னையில் உள்ள 'தென் மொழிகள் புத்தக டிரஸ்ட்' தான். இந்த நிறுவனத்தின் ஆதர வில் அடையாறு நேரு நகர் விக்ஞான பிரகாஷனு ஸ்தாபனம் தயாரித்துக்கொடுத்த 'ஜீவ சத்வகளு' என்ற கன்னடப் புத்தகம் தான் இந்த ஐந்நூறாவது புத்தகமாக வெளி வந்தது. யுனெஸ்கோ, டெபுடி டைரக்டர் ஜெனரல் டாக்டர் ஆதிசேஷய்யா இந்தப் புத்தகத்தை வெளியிட்டார்.

ஐந்நூறாவதாக வெளியிடப்படும் புத்தகம் அதிர்ஷ்டம் வாய்ந்த புத்தகம் என்பதைத் தவிர ஜீவனுள்ள புத்தகமும் கூடத்தான். 'ஜீவ சத்வகளு' என்ற கன்னட வார்த்தை வைட்டமின்களைக் குறிக்கிறது. உடல் வளர்ச்சிக்கு உணவில் சேரும் வைட்ட மின்கள் எத்தனை முக்கியமோ, அதே போல் அறிவு வளர்ச்சிக்குப் புத்தகங்கள் மூலம் கிடைக்கும் விஷய ஞானம் என்ற வைட்ட மின்கள் தேவை என்று ஒப்புக்கொள்ளத் தானே வேண்டும்? அந்தப் பணியை ஃபோர்ட் ஃபவுண்டேஷன், யுனெஸ்கோ, மத்திய, மாநில அரசுகள் முதலியவற்றின் துணையோடு தென் மொழிகள் புத்தக டிரஸ்ட் செய்து வருகிறது.

இந்த டிரஸ்டின் ஆதரவில் இதுவரை வெளி யாகி யிருக்கும் புத்தகங்களின் பட்டியலைப் பார்க்கும்போது பிரமிப்பே உண்டாகிறது.

மருத்துவம், விஞ்ஞானம், சமூகம், பொரு ளாதாரம், பொழுதுபோக்கு, வன இயல், பிரயாணம், சிறுவர் இலக்கியம், விளையாட் டுக்கள், வேதாந்தம் ஆகிய எல்லாத் துறை களுக்குமே எந்த வித பாரபட்சமுமில்லா மல் இந்த நிறுவனம் புத்தகங்களை வெளி யிடுவது மூலம் சேவை செய்கிறது. இந்தப் புத்தகங்கள் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு தென் பிராந்திய மொழிகளிலுமே வெளியாகின்றன.

கணக்கு வேண்டுமா? இதோ! இதுவரை தமிழில் 166 நூல்களும் தெலுங்கில் 119 நூல்களும் மலையாளத்தில் 118 புத்தகங் களும், கன்னடத்தில் 97 புத்தகங்களும் வெளிவந்திருக்கின்றன. புத்தகங்களின் விலை களும் சாதாரண மனிதர்களும் தைரியமாக வாங்கக் கூடிய அளவிலேயே இருக்கின்றன.

ஒவ்வொரு வீட்டிலும் சிறிய அளவி லாவது ஒரு நூலகம் செயல்பட வேண்டும் என்ற கொள்கையை உடைய இந்த நிறு வனம் 'வீட்டு நூலகத் திட்டம்' ஒன்றை உருவாக்கிச் செயல்படுத்தத் தொடங்கி யிருக்கிறது.

பாலசரஸ்வதியும் டாக்டர் ராகவனும் சேர்ந்து எழுதிய பரதநாட்டியப் புத்தகத்தின் மீது பேத்திக்கு ஈடுபாடிருந்தால், ஓய்வு பெற்ற தாத்தா ஈஸிச்சேரில் சாய்ந்தபடி ரத்தினவேல் சுப்பிரமணியம் எழுதிய 'அற் புத மருந்துகள்' என்ற புத்தகத்தைப் படித்து முடித்து, அக்கம் பக்கத்திலுள்ள வர்களுக்கு இலவச யோசனை சொல்லலாம்.

அப்பாவுக்குப் 'பொதுமக்களும் பொரு ளாதாரமும்' சுவாரசிய மளித்தால் அம்மா வுக்கு ஓய்வு நேரத்தை ஓடச் செய்ய 'ஏழா வது குதிரை' என்னும் கதை உதவாதா, என்ன?

அண்ணன் உல்லாச விளையாட்டுக்கள் புத்தகத்தைப் பிரித்தால் அம்பிப் பயலும் போட்டி போட்டுக் கொண்டு 'வீரசிம்மனின் வெற்றி யாத்திரை'யை எடுத்து வைத்துக் கொண்டு வீர தீரக் கதை கற்பனையில் மிதக்கலாமே?

இந்த மாதிரிப் புத்தகங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக வாங்கி வீட்டில் சேர்த்துப் படிக்கவும், பார்க்கவும் வசதி செய்யும் வகையில் மாதம் ஐந்து ரூபாய் சந்தாவாகப் பதினெட்டு மாதங்கள் கட்டினால் நூற்றி முப்பது ரூபாய் பெறுமானமுள்ள புத்தகங் களை வழங்க இந்த நிறுவனம் தயாராக இருக் கிறது. அதாவது ரூபாய் நாற்பது லாபம்!

இந்த இடத்தில் ஒரு ரகசியத்தை அம்பலப் படுத்துகிறேன். கல்கி வெள்ளிவிழா சிறு கதைப் போட்டியில் பரிசுகள் பெற்ற பன்னிரண்டு சிறுகதைகளையும் தொகுத்துத் தென் மொழிகள் புத்தக டிரஸ்ட் விரைவில் புத்தக உருவில் வெளியிடலாம் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

—மேனு

படம்: தென் மொழிகள் புத்தக டிரஸ்டின் 500 வது வெளியீட்டு விழாவில், நூலை வெளியிட்ட யுனெஸ்கோ துணை டைரக்டர் ஜெனரல் திரு ஆதிசேஷையா பேசிக் கொண்டிருக்கிறார். அவருக்கு இருமருங் கிலும் டாக்டர் லட்சுமணசாமி முதலியாரும் டிரஸ்ட் தலைவர் திரு கோவிந்தராஜுலுவும் அமர்ந்துள்ளனர்.



## அநுபவம் புதுமை!

□ "இன்றைக்கு எட்டாவது நான் சிவசாமியைத் தீர்த்துவிட வேண்டும்..." என்று யாரோ சதிகாரர்கள் பேசிக்கொண்டிருந்ததைத் தற்செயலாய்க் கேட்ட ரமேஷ் என்ற வாலிபன் முன்பின் தெரியாத அந்த அப்பாவி சிவசாமியைக் காப்பாற்றிவிட முடிவு செய்தான். சதிகாரர்களின் பேச்சில் டெலிபோனைப் பற்றிய பிரஸ்தாபம் வரவே, டெலிபோன் டைரக்டரியைப் புரட்டிப் பார்க்க, அதில் பல சிவசாமிகள் பெயர் காணப்படவே, நான்கு சிவசாமிகளுக்கு டெலிபோன் செய்து அவர்களது உயிருக்கு இன்னும் எட்டு நாட்கள்தான் கெடு என்பதை அறிவித்து விடுகிறான், ரமேஷ். அவ்வளவுதான், படம் விறுவிறு என்று வளர்கிறது.

ஒரு சிவசாமி தொழிற்சாலை அதிபர்; இன்னொரு சிவசாமி எழுத்தாளர்; மற்றொரு சிவசாமி ஒரு வியாபாரி; நாலாவது சிவசாமி கள்ளக் கடத்தல் ஆசாமி. ஒவ்வொரு சிவசாமிக்கும் ஒவ்வொரு விரோதி. அந்த விரோதிகளால் உயிருக்கு ஆபத்து என்று ஒவ்வொருவரும் பயப்படுகிறார்கள். திரைக்கதை புதுமையான சுவையோடு செல்கிறது.

டி. எஸ். பாலையாதான் வியாபாரி சிவசாமி. பயந்து பயந்து நடுங்கி அமர்க்களம் செய்தே எல்லாரையும் சிரிக்க வைக்கிறார்.

எழுத்தாளர் சிவசாமி டி. ஆர். ராமச்சந்திரன். அவர் ஒரு நாவலை எழுதிப் படுத்தி வைக்கும் பாடு! அப்பப்பா! எல்லாரையும் ஆட்டி வைக்கிறார். அவரை ஆட்டி வைக்கிறார் மனோரமா. "என்ன நினைத்து என்னை அழைத்தாயோ" என்று சொந்தக் குரலில் கண்ணீருக்கிடையில் அருமையாய்ப் பாடி எல்லாரையும் அதிசயத்தில் ஆழ்த்துகிறார்!

மோசக்காரத் தொழிற்சாலை அதிபர் சிவசாமியாக வருபவர் சுந்தரராஜன். மிடுக்குக் குலையாமல், கம்பீரமாக நடிக்கிறார்.

கள்ளக் கடத்தல் சிவசாமிக்கு ஏற்ற ஆசாமி மனோகர். சிறிது நேரமே வந்தாலும் நன்றாய் நடிக்கிறார்.

முத்துராமனுக்குக் காதலிக்கவும் நேரமிருக்கிறது: துப்புத் துலக்கவும் அவகாசம் இருக்கிறது. ஆனால் நடிப்பில் பாராட்டும்படி ஒன்றும் இல்லையே!

ராஜஸ்ரீ கதாநாயகி. இடுப்பை வளைத்து நடனமாடி அயர வைக்கிறார். ஆனால் சில காட்சிகளிலேயே அவரை மறந்து விடுகிறோமே! கனவுக் காட்சிகளில் ஒளிப் பதிவு மிகவும் நன்றாக இருக்கிறது.

எம். எஸ். விசுவநாதனின் இசையமைப்பு வர வர இனிமை குறைந்து வருவது ஏனோ! அநுபவம் பழைமையாகி வருகிறதோ!

"அநுபவம் புதுமை" — பாதிக்கு மேல் இனிமை!

# வட்டார நகைச்சுவை

# தஞ்சை

ரூ. 25/- பரிசு பெறும் துணுக்கு



தஞ்சை வட்டக்காரர்களுக்குப் பிறர் திறமையைச் சோதிப்பதில் அவா அதிகம்.

தஞ்சாவூரில் தன் திண்ணையில் உட்கார்ந்து தெருவில் சென்றோரை நோட்டம் விட்டு வந்தார் ஓர் ஒற்றைக் கண்ணர். தமக்குப் புதிதாகத் தோன்றிய ஒருவர் நடந்து செல்வதை இவர் கவனித்தார். தெருவில் நடந்தவருக்கு ஒரு கால் சற்று ஊனமானதால் காலைச் சுற்றி வளைத்து ஊன்றி நடந்தார். இவரை நையாண்டி செய்ய எண்ணித் திண்ணையிலிருந்த ஒற்றைக் கண் மனிதர், ''ஓய், சுற்றுக் காலில் இப்பொழுது நெல் என்ன விலைங்காணும்?'' என்று கேட்டார். தெருவில் நடந்தவர் சிறிதும் தயக்கமின்றி ''பொட்டை மரக்காலால் எட்டு என்று கேள்வி'' என்று திருப்பித் தரவும் திண்ணையிலிருந்தவர் வாயடைத்துப் போனார்.

(பொட்டை மரக்கால் என்பது சரியில்லாத ஓர் அளவை)

—சிவி

மாயூரம் ஆசாமிக்கு மடியில் உள்ள வெற்றிலைப் பொட்டணத்தை வெளியில் எடுக்க மனமில்லை. அவர் குடந்தைவாசியைக் கேட்டார்: ''வெற்றிலை பாக்குப் போட்டால் தேவலை; இருக்குமா?''

குடந்தைக்காரர் அவரை எடை போட்டு விட்டார். அவர் பதிலுக்கு, ''பாக்குத்தான் இல்லை; வெற்றிலை இருந்தால் சுண்ணாம்பு கிடைத்துவிடும்; இந்தப் புகையிலை இல்லாத பாடல்லவா பெரும்பாடாக இருக்கிறது!'' என்றார் நாசூக்காக.

—பாணன்





விவசாயத் தந்தை : டேய் ராமு! இந்நேரம் எங்கேடா போயிருந்தே?

மகன் : கொல்லையிலே ஆடுங்க பூந்து கத்தரிச் செடியெல்லாம் மேஞ்சிடுச்சப்பா!

தந்தை : ஏண்டா உலக்கை, கத்தரிச் செடிகளைத் திங்கறவரையுமா பார்த்துக்கிட்டிருந்தே?

மகன் : நம்ம ஆடுங்கப்பா!

தந்தை : அதனாலே கொல்லையிலே மேய விட்டு வேடிக்கை பார்த்தாயா?

மகன் : அடுத்த வீட்டுக் கொல்லையிலே தானேப்பா!

—ச. பழனிவேல்



''யாராவது நூறு ரூபாய் பந்தயம் கட்டுபவர்கள் இருந்தால் அவர்களுக்கு நான் வணங்கும் கடவுளைக் காட்டுவேன்'' எனக் கூடி யிருந்த கூட்டத்தைப் பார்த்து ஒருவன் கூறினான். கூட்டத்தில் ஒருவன் முன்வந்து ''இதோ நூறு ரூபாய். எங்கே காட்டு, பார்க்கலாம்?'' எனக் கூறி நூறு ரூபாயைப் பந்தயமாகக் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்ட அவன், அந்த ரூபாயைக் கூட்டத்தில் உள்ளோரிடம் காட்டி, ''இதோ இதுதான் நான் வணங்கும் கடவுள். பார்த்துக் கொள்ளுங்கள்'' என்றானாம்.

—சேக் உதுமான், பெங்களூர்—2

---

தஞ்சை மாவட்டவாசிகள் உண வில் சுவையை அதிகம் எதிர் பார்ப்பார்கள். அவர்கள் உணவு எளிமையாகவும் இருக்கும். மேக் கண்ட துணுக்கு தஞ்சை மாவட்ட வாசிகளின் உணவு ரஸனைச் சிறப் புக்காகக் கூறப்படுகிறது.

ஒரு தனவந்தன் தன் தருமச் சத்திரத்தில் உணவு ரஸனையுள்ள ஒரு காரியஸ்தனை நியமிக்க எண்ணினான். சத்திரத்துக்கு வரும் வழிப்போக்கர்களுக்குச் சுவையான உண்டி அளிக்க வேண்டுமென்பதே அவன் அவா. இதற்காக அவன் ஒரு தேர்வு நடத்தத் திட்டமிட்டான்.



சிறந்த விருந்தொன்று நடத் தப்பட்டது. விருந்தில் பலவகைக் கனிகளும் பட்சணங்களும் பரி மாறப்பட்டன. அந்த விருந்தில் மிளகு ரசம் ஒரு சிறப்பான அம் சமாகும். தனவந்தன் இந்த விருந்தில் மிளகு ரசம் மட்டும் யாருக்கும் ஒரு கரண்டிக்குமேல் போடக் கூடாது என்றும், உண் பவர் யாராவது 'இன்னும் கொஞ்சம்' என்று கேட்டால் அவர் தலை வெட்டி எறியப்படும் என்றும் கடுமையான உத்தரவு போட்டிருந்தான்.

விருந்து நடந்து கொண்டிருந் தது. ஒரு வயதான கிழவர் மட் டும் ''அப்பா! அந்த மிளகு ரசத்தை இன்னும் கொஞ்சம் போடு. சாப்பிட்டுவிட்டு நிம்மதி யாகச் சாகிறேன்'' என்றார்.

மறுநாள் தனவந்தன் அவ ரைத் தன் சத்திரத்துக்குக் காரி யஸ்தராக நியமித்து விட்டான்.

—''பிரேமி'' - பொறையார்

---

தஞ்சாவூர்க்காரர்களின் பேச்சு வல்லமையை விளக்க இப்படி ஒரு கதை கூறுவதுண்டு:

ஸைமன் கமிஷன் இந்தியாவில் இருந்த சமயம் அது. அவர்கள் தஞ்சாவூர் வழியாகச் சென்றனர். ஸைமன் அவர்கள் இந்தியாவின் கல்வியைப் பற்றித் தாழ்வான அபிப்பிராயம் கொண்டிருந்தார். அவர் ஒரு வயல் நடுவே உட்கார்ந்து கொண்டிருந்த வயதான குடியான வனிடம் சென்று, ''பெரியவரே! தாங்கள் எவ்வளவு படித்திருக்கிறீர்கள்?'' என்றார். ''ஏதோ, சிறிது படித் திருக்கிறேன்'' என்றான் கிழவன். ''சரி, நான் ஒரு கேள்வி கேட்கிறேன். அதற்குப் பதில் கூறுங்கள்'' என்று கூறிக் கேள்வியைக் கேட்டார் ஸைமன். ''எனது தோட்டத்தில் பதினைந்து தென்னை மரங்கள் உள்ளன. பன்னிரண்டு ஆடுகள் அதில் புகுந்து பாழ்படுத்தின. அப்படியானால் என் வயது என்ன?'' என்று கேட்டார்.



''ஐயா, தங்களுக்கு வயது அறுபது'' என்றான் கிழவன். ஸைமனுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட் டது. இதில் ஏதாவது மாய மந்திரம் இருக்குமோ என்ற சந்தேகத்துடன் ''எப்படி ஐயா, சரியாக என் வயதைக் கண்டு பிடித்தீர்கள்?'' என்று கேட்டார்.

கிழவன், நிதானமாகப் பதில் அளித்தான்: ''ஐயா, எனக்கு ஒரு தம்பி இருக்கிறான். அவன் ஒரு அரைப் பைத்தியம். அவனுக்கு வயது முப்பது. அதை வைத் துக் கொண்டுதான் கணக்கிட்டேன்'' என்றான்.

—சாவித்திரி வெங்கடேசுவரன், சென்னை—28

ரூபாய் 25.00 பரிசு பெறுபவர்

வி. எம். ஸ்ரீனிவாஸ ராவ் (சீனி)
17, ஆறுவது மெயின் ரோடு
ராஜா அண்ணாமலைபுரம்
சென்னை-28









# தேர்தல் அக்கப்போர்!

**குற்ருலம் வீ. சம்பந்தன்**

☐ நாம் ஒருவரை ஒருவர் கவிழ்க்கப் பார்த்ததால்தான் நாமே அழிந்தோம்.
— பட்நாயக்

காங்கிரஸ்காரர்கள் ஒருவரையொருவர் கவிழ்ப்பது கிடக்கட்டும்; காங்கிரசையே அல்லவா கவிழ்த்து விட்டார்கள், மக்கள்!

☐ தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் காரியக் கமிட்டிக் கூட்டத்தில், 'தமிழ் நாட்டில் காங்கிரஸ் தோற்றது ஏன்' என்று ஆராய ஒரு குழு அமைத்துள்ளனர்.
—செய்தி

பாவம்! பதவியை இழந்த காங்கிரஸ் தலைவர்களுக்கு இந்தக் குழுவிலாவது பதவி கொடுத்து ஆறுதல் அளிக்க வேண்டாமா?

☐ கடந்த இரண்டு ஆண்டுகளாக அரசியல் கட்சிகள் நடத்திய போராட்டங்களைக் கண்டு மக்கள் வெறுப்பு அடைந்திருப்பார்கள் என்று கருதப்பட்டது. ஆனுல் போராட்டங்களினுல் மக்கள் கவரப்பட்டிருக்கின்றனர்.—காமராஜ்

இதெல்லாம் தோல்வியினுல் அவருக்கு ஏற்படும் மனப் போராட்டம்தான் என்கிருர் எதிர்ப்பு அணியாளர் ஒருவர்.

☐ காங்கிரஸ் தோல்விக்கு ஆட்சிதான் காரணம்.
—காங்கிரஸ் தலைவர்

அந்த ஆட்சியின் தோல்விக்கு (காங்கிரஸ்) கட்சிதானே காரணம் என்கிருர் தோற்றுப் போன அமைச்சர் ஒருவர்.

☐ தாம்பரத்தில் பூமி அதிர்ச்சி. நான்கு தடவை பூமி அதிர்ந்தது.
—செய்தி

தமிழகத் தேர்தல் முடிவு அறிவிப்பின் போது 184 தடவை ஏற்பட்ட அதிர்ச்சியை விட இது என்ன பயங்கரமானதா என்கிருர் தாம்பரத்தைச் சேர்ந்த காங்கிரஸ்காரர் ஒருவர்.

☐ பிரம்மானந்த ரெட்டியின் மந்திரி சபையில் சஞ்சீவ ரெட்டி கோஷ்டிக்கு இடம் இல்லை.
—செய்தித் தலைப்பு

பதவி கிடைக்காவிடில் வேஷ்டியை வரிந்து கட்டிக் கொண்டு கோஷ்டிச் சண்டையில் இறங்கினுலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

☐ எதிர்ப்பு அணி பற்றித் தப்புக் கணக்குப் போட்டுவிட்டோம்.
—முன்னுள் அமைச்சர் வெங்கடராமன்

கூட்டாவது, அணியாவது என்று காங்கிரஸ்காரர்கள் கேலி செய்தார்களே அதைக் குறிப்பிடுகிருரா?









புது தில்லியில் பாரதப் பிரதம மந்திரியின் இல்லத்துக்கு விஜயம் செய்த லார்டு மவுண்ட் பாட்டன் பிரபு பார்வையாளர் புத்தகத்தில் கையெழுத்திடுகிறார்.



ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் சாஹித்ய அகாடமியின் பரிசை 'வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு' ஆசிரியர் ம. பொ. சி. அவர்களுக்கு வழங்குகிறார்.





சென்னை வேத தர்ம பரிபாலன சபையினர் சென்னை மயிலை சீனிவாச சாஸ்திரி ஹாலில் அமெரிக்க கான்சல் ஜெனரல் பிராங்கின் தலைமையில் காஞ்சி காமகோடி ஆசாரிய சுவாமிகள் பீடமேறி அறுபது ஆண்டுகள் நிறைவுற்றதைச் சிறப்பாகக் கொண்டாடினர். ஸ்ரீமதி சௌந்தராகைலாசம் உரையாற்றுகிறார்.

□



தமிழகத்தில் ஆட்சிப் பொறுப்பேற்றுள்ள சென்னை முதன் மந்திரி திரு அண்ணாதுரை அவர்களுக்கும், மந்திரி சபையினருக்கும் சென்னை நகரசபையினர் பாராட்டு வைபவம் ஒன்றை நடத்தினர். சென்னை மேயர் திரு சம்பந்தம் வரவேற்புரை நிகழ்த்துகிறார்.




# கல்லுக்குள் ஈரம்

ர. சு. நல்லபெருமாள்

### அத்தியாயம் 11

## நட்பின் உதயம்

**து**க்கம் தொண்டையை அடைக்க அத்தை வீட்டுக்குள் நுழைந்து மறைந்தது ரங்கமணியின் நினைவில் உறுத்திக் கொண்டிருந்தது. இரத்தத்தைக் கூடக் கண்டு மனங்கலங்காத ரங்கமணி, கண்ணீரைக் கண்டு மனம் பதறினான். கண்ணீருக்கு இரத்தத்தைவிடச் சக்தி அதிகமாயிற்றே!

மன உளைச்சலுடன் அச்சாபீசுக்குள் நுழைந்தான் ரங்கமணி. உள்ளே அச்சு இயந்திரங்கள் இரைச்சல் போட்டுக் கொண்டிருந்தன. உள்ளே மத்திய அறையில் காசிலிங்கமும் சோமுவும் ஒரு மேஜை மீது உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

ரங்கமணி உள்ளே நுழைந்ததும் காசிலிங்கம் உற்சாகத்துடன் கத்தினான். ''ரங்கமணியே வந்துவிட்டான்!''

''ஏன், என்ன விஷயம்?'' — ரங்கமணி கேட்டான்.

''உன்னைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம். சர்தார், உன்னிடம் ஒரு வேலை ஒப்படைத்திருக்கிறார்'' என்றான் சோமு.

ரங்கமணி புருவத்தை உயர்த்தி அவர்களைக் கூர்ந்து பார்த்தான்.

''நீ உடனே சிவானந்தத்தைப் பார்க்க வேண்டுமாம்'' என்றான் காசிலிங்கம்.



''ஏன்?''

''கயேச்சைப் பத்திரிகையின் நிருபர் என்ற முறையில் நீ போகிறாய். நானோ மறுநாள் கண்ணுக்கடை மறியல். அதுபற்றிச் சிவானந்தத்தின் நிலைமையைத் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்றான் காலிலிங்கம்.

''இவ்வளவுதானே?''

''இதில் உன்னுடைய திறமை தெரிய வேண்டும். ? அதாவது, நிருபர் என்ற முறையில்.... புரிந்ததா?''

''சிவானந்தத்தின் உள்ளத்தையே இங்கு கொண்டு வந்து விடுகிறேன், போதுமா?'' என்றான் ரங்கமணி, உற்சாகத்துடன். உடனே போனைக் கையில் எடுத்துச் சிவானந்தத்தின் வீட்டுக்குப் போன் செய்தான்.

''ஹலோ... மிஸ்டர் சிவானந்தம் வீடு தானே?'' என்று கேட்டான் ரங்கமணி.

''ஆமாம்... அவர் வீடுதான்...'' என்று மறு பக்கத்திலிருந்து ஒரு பெண்ணின் குரல் கேட்டது. ரங்கமணி, போனில் பேசும் பக்கத்தைக் கையால் பொத்திக்கொண்டு, ''சோமு, யாரோ ஒரு பெண் பேசுகிறாள்!'' என்றான்.

''அந்த ராக்ஷஸியாகத்தான் இருக்கும். அவன் மனைவிதான். நீயே அவளிடம் பேசு'' என்றான் சோமு.

''ஹலோ... மிஸ்டர் சிவானந்தம் இல்லையா?'' ரங்கமணி போனில் கேட்டான்.

''பேசுவது யார்?'' போனில் கேள்வி வந்தது.

''இங்கே சுயேச்சைப் பத்திரிகையிலிருந்து பேசுகிறேன்.''

''ஓஹோ... அவர் இல்லை. ஆபீசுக்குப் போய்விட்டார்.... என்ன வேண்டும்?''

''அவர்களைத்தான் நேரில் சந்திக்க வேண்டும்.''

''எது விஷயமாக...?''

''அவர்களிடம்தான் பேச வேண்டும்.''

''ஓ....இரகசியமோ...?''

''இரகசியம் இல்லை. ஆனால், முக்கியமான விஷயம்... பத்திரிகை விஷயம்.''

''உங்கள் வீராங்கனை, திரிவேணி அம்மையார் ஒருவேளை கள்ளுக்கடை மறியலை வாபஸ் பெற்றுவிட்டார்களோ என்று நினைத்தேன். அப்படி ஒன்றும் இல்லையே?''

இந்தப் பேச்சைக் கேட்டதும் ரங்கமணிக்குக் கோபம் வந்தது.

''இது திரிவேணியிடம் கேட்க வேண்டிய கேள்வி. மேலும், இதற்கும் உங்களுக்கும் சம்பந்தமில்லை'' என்று வெடுக்கெனக் கூறிவிட்டு, போனைக் கீழே வைத்து விட்டான்.

''அந்தப் பெண் பிசாசு கமலாவின் மூக்கை நன்றாக நறுக்கினாய். என்ன கேட்டான்?'' என்று ஆவலுடன் கேட்டான் சோமு.

''கள்ளுக்கடை மறியலைத் திரிவேணி வாபஸ் வாங்கிவிட்டாளோ என்று கேட்கிறான்'' என்றான் ரங்கமணி.

''இவனுக்கு இதில் என்ன சம்பந்தம்? இந்தப் பேயை ஒழித்துக் கட்டினால்தான் போலீசின் அட்டகாசம் குறையும். சரி, சிவானந்தம் எங்கே இருக்கிறானாம்?''

''ஆபீஸில்... நான் போய்விட்டு வந்து விடுகிறேன்'' என்று கூறிவிட்டு வெளியேறினான் ரங்கமணி.

ஃ ஃ ஃ

போலீஸ் ஆபீஸில் சிவானந்தத்திடம் வெங்கு பேசிக் கொண்டிருந்தான். அவனுக்கு எவ்வளவோ சந்தேகங்கள். அவனுடைய கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண் டிருப்பதில் சிவானந்தத்துக்குப் பொழுது போய்க் கொண்டிருந்தது. வெங்கு பொடியைப் பலமாக உறிஞ்சி விட்டு ஏதோ பலத்த யோசனையில் ஆழ்ந்திருந்தான். பிறகு கேட்டான்:

''இந்தத் திரிவேணிக்கு ஏன் இந்த வம்பெல்லாம்?''

சிகரெட்டை ரசித்தவாறே, சிவானந்தம் சிரித்தான்.

''நம்முடைய கமலாவைப் போல் இருந்து விடக்கூடாதோ...?'' என்றான் வெங்கு தலையைச் சொறிந்து கொண்டே. அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ''ஊரிலே கள்ளுக் குடித்தால் திரிவேணிக்கு என்ன வந்தது?''

சிவானந்தம், அவன் பேசுவதை வேடிக்கையாகக் கேட்டுக் கொண்டிருந்தான். திடீரென்று வெங்கு கேட்டான்:

''திரிவேணியைப் பார்த்திருக்கிறீர்களா?''

''ஓ...''

''எப்படி...? நல்ல பெண் இல்லையா?''

''நம்ம கமலாவை விடவா?'' — சிவானந்தம் கேட்டான்.

''மூக்கும் முழியும் அழகாயிருந்தால் மட்டும் போதுமா?'' என்றான் வெங்கு வெடுக்கென்று.

இந்தப் பித்துக்குளிக்குக் கூட இவ்வளவு தாரதம்மியம் பார்க்கும் புத்தி இருக்கிறதே என்று வியந்தான், சிவானந்தம்.

''சரி, பொடி வாங்கத் துட்டு'' என்றான் வெங்கு. சிவானந்தம் கொடுத்த ஓர் அணாவை வாங்கிக் கொண்டு வெளியேறினான்.

பித்துக்குளியின் பேச்சிலும் உண்மை மறைந்து கிடப்பதை உணர்ந்த சிவானந்தம், சிந்தனையில் ஆழ்ந்தான். அவன் நினைவு கமலவாசகியைச் சுற்றியது. மனைவிமீதுள்ள பாசம் நெஞ்செல்லாம் நிறைந்திருந்தாலும், அதில் ஏதோ ஒரு திருப்தியின்மையும் இருந்தது. அவன் மனம் அடிக்கடி திரிவேணியையும், கமலவாசகியையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டே யிருந்தது. கமலவாசகி, அவனுடைய மனைவி என்ற உறவின் அழுத்தத்தில் அவனுடைய பாசத்தைத் தனதாக்கிக் கொண்டாள். ஆனால் திரிவேணி மீது அவனுக்கு ஒருவித மரியாதையே தோன்றி யிருந்தது. அவளுடைய எளிமையும், தியாகமும், உள்ளத்தில் எதையும் மறைக்காத குழந்தைத்தன்மையும் சிவானந்தத்தைக் கவர்ந்தன.

முதன் முதலில் நெல்லை இந்துக் கல்லூரியில், மாணவர் சங்கத்தில் அவளைச் சந்தித்தது ஞாபகம் வந்தது. இலக்கியத்தின் தத்துவம் பற்றி அவனும் அவளும் மாணவர் அரங்கில் பேசுவதாக ஏற்பாடு ஆகியிருந்தது.

அப்போதுதான் முதன் முறையாகத் திரிவேணியைச் சந்தித்தான். அதற்கு முன்பே அவளைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தான். அவளுடைய சத்தியாக்கிரகப் போராட்டங்களையும், சிறை வாழ்க்கையையும் பற்றிக் கேள்விப்பட்டிருந்ததால், அவளை நேரில் சந்திக்கவும் விரும்பினான்.

மாணவர் அரங்கில் கூட்டம் நிரம்பி வழிந்தது. மேடையில் சிவானந்தம் அமர்ந்திருந்தான். திரிவேணி இரண்டு நிமிஷங்கள் தாமதமாக வந்தாள். அறைக்குள் அவள் நுழைந்ததும் ''வந்தே மாதரம்...'' என்ற கோஷம் மாணவர்களிடையே எழுந்தது. அவள், மாணவர்களை நோக்கிக் கைகூப்பி வணங்கிவிட்டு மேடை மீது ஏறினாள். சிவானந்தம் அவளை உற்றுக் கவனித்தான்.

கதராடை அவளுடைய இளமைக்கு ஏற்றதாயில்லாவிட்டாலும், புனிதத் தன்மை அவளைச் சூழ்ந்திருப்பதை உடனே உணர்ந்து விட்டான். அரசியலில் ஈடுபட்டுப் பெற்ற அனுபவம், அவள் முகத்தில் நன்கு பதிந்திருந்தது. அவளுடைய சாந்தமான பார்வையும், அடக்கமான புன்முறுவலும், பணிவும் சிவானந்தத்தைக் கவர்ந்தன.

அவள் மேடைமீது ஏறியபோது, சிவானந்தம் தன்னை யறியாமலே நாற்காலியிலிருந்து எழுந்து நின்றான்.

''இவர்கள்தான் புதிதாக வந்திருக்கும் போலீஸ் அதிகாரி, மிஸ்டர் சிவானந்தம்'' என்று மாணவர் காரியதரிசி அவனைத் திரிவேணிக்கு அறிமுகம் செய்து வைத்தான். திரிவேணி இரு கைகளையும் கூப்பி வணங்கினாள். சிவானந்தம், பதிலுக்கு வணங்கிய போது ஏதோ ஒரு பெண் தெய்வத்தை வணங்குவது போன்ற உணர்வு தட்டியது. அறிவை மயக்கி வெறியூட்டும் அழகு அவளிடம் இல்லை. ஆத்மாவைத் தீண்டும் ஒரு புனித சக்தி அவளுடைய மலர்ந்த முகத்தில் இருப்பதாக உணர்ந்தான்.



# சில சமயங்களில் வலியிலிருந்து நிவாரணம் பெற்றால் மட்டும் போதாது என்பதைப் பெண்மணிகள் அறிவார்கள்...

ஸாரிடான் தரும் இதமும், புத்துணர்ச்சியும் சில சமயங்களில் பெண்மணிகளுக்குத் தேவைப்படுகிறது. அதிமந்தமான உணர்ச்சி, சோர்வு அல்லது வலியிலிருந்து நிவாரணமளித்து, உங்களுக்கு தெம்பான உணர்ச்சியையும் மனோ உல்லாசத்தையும் அளிக்க ஒரே ஒரு ஸாரிடான் போதுமானது. ஸாரிடான் சாப்பிட்ட மாத்திரத்திலேயே அன்றைய அலுவல்களைத் திறம்படச் சமாளிக்கக்கூடிய வலுவையும், தெளிவாகச் சிந்திக்கும் திறனையும், உல்லாச உணர்ச்சியையும் பெறுவீர்கள்.

ஒரே ஒரு ஸாரிடான், வலியிலிருந்து நிவாரணம் அளித்து, சோர்வைப் போக்கி, புத்துணர்ச்சியளிக்க வல்லது. தலைவலி, பல்வலி மற்றும் உடல் வலியிலிருந்து நிவாரணம் பெற எப்பொழுதும் ஸாரிடான் தயாராக வைத்திருங்கள்.

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிப்யூடர்ஸ்: வால்டாஸ் லிமிடெட்

''உங்களைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன்'' என்றாள் திரிவேணி.

''என்னவென்று?''

''இலக்கியத்தில் ஈடுபாடு உடையவர்கள் என்று'' என்றாள். இதைக் கேட்டுச் சிவானந்தம் பெருமையால் பூரித்தான்.

அரங்கத்தில் முதலில் சிவானந்தம் பேசினான். இலக்கியத்தில் சொல்லழகு என்பதைப் பற்றிப் பேச வேண்டும் என்றுதான் வந்தான். ஆனால், அவன் பேச்சு காதல் இலக்கியத்தைப் பற்றிய திசையில் சென்று விட்டது. கடையில் ஒரு குறிப்பிட்ட பொம்மையை வாங்கச் செல்லும் குழந்தை, கடைக்குச் சென்று வேறு பொம்மைகளைக் கண்டதும் வாங்க வந்த பொம்மையை மறந்து, போவது மாதிரிதான்.

இலக்கியத்தில் காதல் அமைந்த விதத்தை ரசித்துக் கூறினான். கடைசியில் காதல்தான் இலக்கியத்தின் உயிர்நாடி என்று கூறி முடித்து விட்டான். மாணவர்கள் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள். மாணவிகள் பக்கமிருந்துக் கூட கைதட்டல் கிளம்பியது.

திரிவேணி பேச எழுந்தபோது, ஆரவாரம் குறைந்து எல்லாரும் அவள் பேச்சைக் கேட்க ஆயத்தமாயினர்.

அவளுடைய பேச்சு காரசாரமாயிருந்தது. சில சமயங்களில் சிவானந்தத்தின் பேச்சைத் தாக்குவதாகக் கூட அமைந்தது. அவள் சொன்னாள்:

''வாழ்க்கையில் காதல் ஒன்றுதானா பிரதானம்? தியாகத்துக்கு இடமே இல்லையா? இதனால்தான் இன்று நாம் அடிமைகளாக, பேடிகளாக மாற்றானின் அதிகாரத்துக்குத் தலை குனிந்து நிற்கிறோம். அறிவைக் கிளறுவதுதான் இலக்கியம்...''

திரிவேணியின் ஆவேசப் பேச்சில் அந்த அறை முழுவதும் லயித்திருந்தது. சிவானந்தம் வெட்கிப்போய் அமர்ந்திருந்தான். இலக்கியத்தில் காதலைப் பற்றிப் பேசித் தரம் இறங்கி விட்டோமோ என்ற சந்தேகம் அவனைப் பிடித்துக் கொண்டது. திரிவேணியின் பேச்சுச் சாதுரியத்தையும், இலக்கிய ரசனையையும் கண்டு திகைத்து விட்டான். இலக்கிய உலகை எவ்வளவு துல்லியமாகக் கணித்து விட்டாள் என்று வியந்து, பிரமிப்பில் ஆழ்ந்திருந்தான். கடைசியில் திரிவேணி சொன்னது அவன் நினைவில் ஆழப் பதிந்து விட்டது. அவள் சொன்னாள்:

''அழகிய முகத்தைப் பற்றி முப்பது பக்கம் எழுதுவதைவிட, தியாகிகள் சிந்திய இரத்தத்தைப் பற்றி மூன்று வரிகள் எழுதினாலும் போதுமே. அதுதான் அமர இலக்கியம்.''

இந்த வார்த்தைகள் சிவானந்தத்தின் காதுகளில் ரீங்காரமிட்டுக் கொண்டே இருந்தன. எவ்வளவு பெரிய உண்மை!

மேடையிலிருந்து கீழே இறங்கிய போது, ''உங்கள் பேச்சு பிரமாதம்'' என்றான் சிவானந்தம்.

''உங்களுடைய ரசமான பேச்சை விடவா?'' என்றாள் திரிவேணி சிரித்துக் கொண்டே.

''என்னுடைய கருத்துக்களைத்தான் தாக்கி வீழ்த்தி விட்டீர்களே!'' என்றான் சிவானந்தம் பரிதாபத்துடன்.

''மன்னியுங்கள். ஏதோ உணர்ச்சி வேகத்தில் உங்கள் மனம் புண்படும்படி பேசி விட்டேன் என்று நினைக்கிறேன்.''

''அதெல்லாம் ஒன்றும் இல்லை. உங்கள் பேச்சைத்தான் மாணவர்கள் மிகுந்த அக்கறையுடன் கேட்டார்கள்.''

ஆபீஸில் உட்கார்ந்திருந்த சிவானந்தத்தின் நினைவில் முதன் முதலில் திரிவேணியைச் சந்தித்த அந்தச் சம்பவம் நிழலாடிக் கொண்டிருந்தது. அவளுடைய மேதா விலாசமும் முகவிலாசமும் சிவானந்தத்தின் நெஞ்சில் நிறைவைக் கொடுத்தன.

அவளுக்கு எதிராகச் செயலாற்ற வேண்டிய கடமை தனக்கு இருப்பதை எண்ணிய போது, அந்த நினைவே கசந்தது. அவளை நேரில் சந்தித்து எப்படியும் இந்த மறியலில் தலையிடாதபடி செய்ய வேண்டும் என்று துடித்தான். ஆனால் அன்று காலையில் போனில் பேசியபோது திரிவேணி எவ்வளவு துணிவோடு, திட்டவட்டமாகப் பேசி

---

## இந்தச் சிறுமி யார் தெரியுமா?



புகழ்பெற்ற நாடகத்துறை வல்லுனரான டி. கே. சண்முகத்துடன் சேர்ந்து நடிக்கும் இச் சிறுமி யார் என்று உங்களால் கண்டுபிடிக்க முடிகிறதா? ஒன்று இரண்டு....மூன்று எண்ணிவிட்டோம். தோல்வியை நீங்கள் ஒப்புக் கொண்டு 35ஆம் பக்கத்தைப் புரட்டிப் பார்த்து விட வேண்டியதுதான்!

35ஆம் பக்கத்தைப் புரட்டிப் பார்த்து

விட்டான்! யாரும் சொல்லி மனத்தை மாற்றும் அளவுக்கு அவன் ஒரு குழந்தையா என்ன? மேலும் இது பற்றி எல்லாம் அவளிடம் பேச அவனுக்கு என்ன அருகதை? மகாத்மா காந்தியின் துணை அவளுக்கு இருக்கும்போது எதைப் பற்றித்தான் பயப்படப் போகிறாள்? சிறை செல்வது அவளுக்கு விளையாட்டாகி விட்ட பிறகு அவளுடைய புத்தி மதி அவளுக்கு எதற்கு?

திடீரென்று அவனுக்குத் தான் ஒரு போலீஸ் அதிகாரியாக இருப்பதே மானக்கேடாகத் தோன்றியது. அதுவும் திரிவேணி மாதிரி தியாகிகளை அடித்து விரட்ட வேண்டிய விதி! இதைப் பற்றிக் கமலவாசகியிடம் சொன்னால் சிரிப்பாள்; கோழை என்பாள்; சட்ட வரம்பை மீறுகிறவர்கள் யாரா யிருந்தாலும் — கடவுள் கூடக் குற்றவாளி தான் என்று சாதிப்பாள்....

கமலவாசகியின் நினைவு வந்தபோது அவன் இதயத்தில் பாசத்தின் ஊற்றுப் பெருக்கெடுத்தது. அவளுடைய வாயாடித்தனமும், பிடிவாத குணமும், குறும்பும் அவனுக்குச் சிரிப்பை மூட்டின. திரிவேணியைப் போல் அவளும் கதர் அணிந்து கொண்டு தெருவுக்கு வந்தால்...

இப்படிக் கற்பனை செய்து பார்த்தபோது அவனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. வாய் விட்டுச் சிரித்தான். இந்தச் சமயத்தில்தான் ரங்கமணி உள்ளே நுழைந்தான்.

"என்ன சார், நீங்களே தனிமையில் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டுக்கொண்டே வந்தான், ரங்கமணி.

"வாருங்கள் சார்... எதையோ நினைத்துக் கொண்டேன். சிரித்து விட்டேன். என்ன விஷயமாக வந்தீர்கள்? உட்காருங்கள்."

"நான் சுயேச்சைப் பத்திரிகையின் நிருபர்" என்று கூறிக் கொண்டே நாற்காலியில் அமர்ந்தான் ரங்கமணி.

"ஓ...இப்போது ஞாபகம் வந்துவிட்டது. இரண்டு மூன்று மாதங்களுக்கு முன் சாலைக் குமரன் கோயிலில் சர்தாருடன் உங்களைப் பார்த்திருக்கிறேனே... உங்கள் பெயர்?"

"ரங்கமணி."

"என்ன விஷயமாக வந்திருக்கிறீர்கள்?"

"கள்ளுக்கடை மறியல் நடக்கப் போகிறதே, தங்கள் அபிப்பிராயம் என்ன?"

"ஒரே அபிப்பிராயம்தான். மறியலை முறியடிக்க வேண்டும்."

"மறியல் சாத்விக முறையில் நடந்தால்?"

"எந்த முறையில் நடக்கிறது என்பதை ஆராயும் வேலை எங்களுக்கில்லை. மறியல் செய்பவர்களைக் கலைக்க வேண்டியதுதான் எங்கள் கடமை."

"அப்படியானால், பலாத்காரத்தைக் கட்டாயம் உபயோகிப்பீர்கள்?"

"கட்டாயம்."

"மோதலைத் தடுக்க வேறு உபாயமே கிடையாதா?"

"உண்டு. ஏன் இல்லை? ஒரே உபாயம், திரிவேணியை இந்த மறியலை வாபஸ் பெறச் செய்வதுதான்."

"அது முடியாத காரியம்."

"எனக்கும் இது தெரிந்த விஷயம்தான். நான் கடமையைச் செய்ய வேண்டும்."

"நீங்கள் கடமையை நிறைவேற்றும் போது கொஞ்சம் நிதானமாக நடந்து கொள்ள முடியுமல்லவா?"

இதைக் கேட்டுச் சிவானந்தம் சிரித்தான். பிறகு சொன்னான்: "நிதானம் என்றால்....? கூட்டத்தைக் கலைக்கும்போது நின்று நிதானித்து, யோசித்துச் செயலாற்ற முடியாது. போலீஸ் விஷயம் உங்களுக்குத் தெரிந்தது தானே!"

"தெரியும். ஆனால், உங்கள் உள்ளத்தில் அவ்வளவு கடுமை இருப்பதில்லை. அப்படித் தானே?"

இதைக் கேட்டதும் சிவானந்தம் துணுக்குற்றான். ரங்கமணியைக் கூர்ந்து பார்த்தான். பிறகு இலேசாகச் சிரித்துக்கொண்டே கேட்டான்: "எதனால் இப்படிச் சொல்லுகிறீர்கள்?"

"நீங்களே திரிவேணிக்குப் போன் செய்து மறியல் திட்டத்தைக் கைவிடும்படி கூறினீர்களே, அதற்கு அர்த்தமென்ன?" என்று கேட்டுவிட்டுச் சிவானந்தத்தை உற்றுப் பார்த்தான், ரங்கமணி.

"அநாவசியமாகச் சச்சரவில் அவள் ஈடுபடவேண்டாமென்றுதான்."

"இதற்கும் மேலாக வேறு ஒரு காரணமும் இல்லையா?"

"என்ன?"

"நான் சொல்லட்டுமா?"

"உம்..."

"சத்தியாக்கிரகிகளை அடிப்பதில் உங்களுக்கு இஷ்டமே இல்லை. உண்மையில், உங்கள் மனம் அவர்களுக்காக இரங்குகிறது... சரிதானா...?"

சிவானந்தம் ஒரு கணம் ரங்கமணியைக் கூர்ந்து பார்த்தான். பிறகு ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டு, மற்றொரு சிகரெட்டை ரங்கமணியிடம் நீட்டினான். ரங்கமணி வேண்டாம் என்று மறுத்து விட்டான். புகையை ஊதிவிட்டு, மீண்டும் ரங்கமணி பக்கம் திரும்பினான், சிவானந்தம்.

"சத்தியாக்கிரகிகளிடம் நான் கடுமையாக நடந்து கொள்ளவில்லை என்கிறீர்களா?" என்று கேட்டான்.

"கடுமையாகத்தான் நடந்து கொண்டிருந்திருக்கிறீர்கள். ஆறு மாதங்களுக்கு முன் சுதேசிப் பொருள் இயக்கம் நடந்தபோது நீங்கள், சத்தியாக்கிரகிகளைப் பயங்கரமாகத் தாக்கினீர்களாமே."

"பின்னே என்ன? அப்படியிருந்தும் என்னைப் பற்றி நீங்கள் வேறு விதமாக அபிப்பிராயம் கொள்ளுவானேன்?"

"என்னதான் நீங்கள் கடுமையாக நடந்து கொண்டாலும், அது உங்கள் மனப் பூர்வமான செய்கை இல்லை என்கிறேன், சரிதானே?" — ரங்கமணி கேட்டுவிட்டுப் பதிலை ஆவலோடு எதிர்பார்த்தான்.

"நீங்கள் என்னைச் சந்திப்பது பத்திரிகையின் நிருபர் என்ற முறையிலா அல்லது மனோதத்துவ நிபுணர் என்ற முறையிலா?" என்று கேட்டுவிட்டுச்சிரித்தான், சிவானந்தம்.

"ஒரு பத்திரிகை நிருபருக்கு ஓரளவுக்கு மனோதத்துவமும் தெரிந்திருக்க வேண்டியது மிகவும் அவசியமாயிற்றே" என்றான் ரங்கமணி சிரித்துக் கொண்டே.

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது

மேம்பாடடைந்த, புதிய

# ஸன்லைட்




மேம்பாடடைந்த புதிய ஸன்லைட்! ஒரு முறை வெள்ளோட்டம் பார்த்தீர்களானால் வெட்டவெளிச்சமாகத் தெரியும் அதன் மேன்மை! உண்மை, சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி. சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை... தூய்மை ஓங்க வெளுத்து, ஒளி நிரக்க உதவும்! உங்கள் துணிகள் அனைத்துக்கும் உபயோகியுங்கள்: மேம்பாடடைந்த புதிய ஸன்லைட் சோப்.

**உங்கள் அன்றாடத் துணிகளின் சலவைக்குரியது**
**மேம்பாடடைந்த, புதிய ஸன்லைட்**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

''அருமையாகப் பேசுகிறீர்கள்.''

''ஏதோ ஒரு சக்தி பின்னிருந்து உங்களை மூரடராக ஆக்குகிறது என்று நினைக்கிறேன்.''

''உண்மைதான், மிஸ்டர் ரங்கமணி. சில சமயங்களில் இந்த உத்தியோகத்தின் மீதே கோபம் வரும். என்ன செய்வது...?'' என்று கூறிவிட்டுச் சிகரெட்டை ஆழ்ந்து உறிஞ்சிப் புகையை ஊதினான், சிவானந்தம். ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் அவரவர் சுதந்தரப்படி நடந்து கொள்ள விடாமல் ஏதாவது ஒரு பந்தம் தடுத்துக் கொண்டுதான் இருக்கும்போலிருக்கிறது'' என்று கூறி, ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்.

''அப்படி உங்களைத் தடுக்கும் சக்தி எது?'' — ரங்கமணி மெதுவாகக் கேட்டான்.

சிவானந்தம் சிரித்தான். ''திருடர்களிடம் ஜாக்கிரதையாக இல்லையென்றால் ஆபத்துத்தான்'' என்றான்.

''நீங்கள் இஷ்டப்படவில்லையென்றால் சொல்ல வேண்டாம்.''

''மிஸ்டர் ரங்கமணி, உங்களை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. உங்களோடு பேசிக் கொண்டிருப்பதில் எவ்வளவோ உற்சாகம் அடைகிறேன். ஒரு நல்ல நண்பர் கிடைத்திருக்கிறீர்கள் என்று பெருமைப்படுகிறேன். அடிக்கடி வாருங்கள்... ஆனால் ஒரு நிபந்தனை... ரங்கமணியாக, என் நண்பராக வாருங்கள், திருடராக அல்ல'' என்று கூறிச் சிரித்துக் கொண்டே எழுந்துவிட்டான் சிவானந்தம். வேறு வழியின்றி ரங்கமணியும் எழுந்திருந்தான்.

போலீஸ் ஆபீஸிலிருந்து ரங்கமணி வெளியே வந்தபோது மத்தியானம் ஒரு மணி இருக்கும். பசி வயிற்றைக் கிள்ளியது. வீட்டுக்குப் போகலாமா என்று நினைத்தான். ஆனால் அத்தையின் நினைவு வந்ததும் தயங்கினான். அத்தையின் முன்னால் செல்லவே அச்சம் தோன்றியது. அவள் மனம் நோகும்படி பேசிவிட்டு எப்படி அவள் எதிரில் போய் நிற்பது?

## இவரேதான் அந்தச் சிறுமி!

தஞ்சை ஜில்லாவில் பிறந்த சங்கீத வித்துவான் டி. எம். தியாகராஜனே அந்தச் சிறுமி, பதிபக்தியில் டி. கே. சண்முகத்துடன் அவர் நடிக்கிறார்.

''பள்ளிக்கூட நிழலில் ஒன்றிரண்டு நாள் ஒதுங்கியதுதான். ஏழாவது வயதில் நான் சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு எனக்கு வந்து விட்டது. சிறு வயதில் தந்தையிடம் பயின்ற சங்கீதமும், தஞ்சாவூர் ஸ்ரீ வைத்தியநாதய்யரிடம் பயின்ற சாதகமும் நாடகத்துறையில் வேலை தேடிச் செல்ல எனக்கு உறுதுணையா யிருந்தன. முதன் முதலில் 1929ம் வருஷத்தில் ராஜாம்பாள் கம்பெனியில் சேர்ந்தேன். 1933ம் ஆண்டில் பக்கிரி ராஜா கம்பெனியில் முக்கிய வேஷங்களை ஏற்றேன். 1934ம் வருஷம் டி. கே. எஸ். சகோதரர்கள் நாடகக் குழுவில் சேர்ந்து பெண் வேஷம் போடும் முக்கிய நடிகனானேன். எனக்கு அந்தக் காலத்தில் ஐம்பது ரூபாய் டி. கே. எஸ். சகோதரர்கள் சம்பளமாகத் தந்தார்கள். அது இன்று ஆயிரத்துக்குச் சமானம்!'' என்று பெருமையோடு சொல்லிக் கொண்டார் சங்கீத வித்துவான் ஸ்ரீ டி. எம். தியாகராஜன்.



1936ம் வருஷம் டி. கே. எஸ். சகோதரர்கள் சினிமாத் துறையில் புகுந்ததும் ஸ்ரீ டி. எம். தியாகராஜன் சங்கீதத்துக்கு வந்து சேர்ந்தார். அகில இந்திய ரேடியோவிலும் பல மேடைகளிலும் கல்யாணங்களிலும் கச்சேரிகள் செய்து வந்தார். 1941ம் வருஷத்திலிருந்து மூன்று வருஷங்கள் செம்மங்குடி சீனிவாச அய்யரிடம் தம் சங்கீதத்தை வளர்த்துக் கொள்ளச் சிஷ்யராகச் சேர்ந்து குருகுலவாசம் செய்தார்.

''உங்கள் நாடக வாழ்வில் மறக்கமுடியாத நிகழ்ச்சி ஏதாவது இருக்கிறதா ?''

''ஓ! மேட்டுப்பாளையத்தில் டி. கே. எஸ். சகோதரர்களின் நாடகங்கள் நடந்து கொண்டிருந்தன. எனக்குக் குளிர் ஜுரம் வந்து விட்டது. அந்தக் காலத்தில் ஸ்திரீபார்ட் இல்லாவிட்டால் நாடகம் நடத்துவது இயலாத காரியம். ஆகவே, எனக்கு மாலை நேரங்களில் கொய்னா மாத்திரையைக் கொடுத்து, வேஷத்தைப் போட்டுக் கொள்ளச் செய்து நடிக்கச் சொல்லுவார்கள். நாடகம் முடிந்ததும் வந்து படுத்துக் கொள்வேன். அடுத்த நாள் மாலை வரையில் எழுந்திருக்க முடியாது. கொய்னா மாத்திரை எங்கள் நாடகம் நடக்க ஒத்தாசை செய்திருக்கிறது!'' என்றார் ஸ்ரீ டி. எம். தியாகராஜன்.

அன்று உண்ணாவிரதம் இருந்துவிட வேண்டியதுதான். அத்தையைக் கண் கலங்க வைத்ததற்குத் தனக்குத் தண்டனை வேண்டும்.

தனக்குத் தானே விதித்துக் கொண்ட தண்டனையால் மனத்தைச் சமாதானப்படுத்த முயன்றான். ஆபீசுக்குத் திரும்பி வந்து சேர்ந்தபோது அச்சாபீஸின் உள் பக்கம் தாளிடப்பட்டிருந்தது. கதவைத் தட்டிய சிறிது நேரத்தில் சோமு தூக்கக் கலக்கத்துடன் வந்து கதவைத் திறந்தான்.

''என்ன பகலிலேயே தூக்கமா?'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான் ரங்கமணி. சாப்பாட்டுக்காக அச்சகத்தின் மற்றத் தொழிலாளிகள் வெளியே போயிருந்தார்கள்.

''சிவானந்தம் எப்படிப் பேட்டியளித்தான்?'' — சோமு ஆவலோடு கேட்டான்.

''நன்றாகத்தான் பழகுகிறான். ஆசாமியை வலைக்குள் இழுத்துவிடத்தான் முயன்றேன். பிடி கொடுக்காமல் பேசுகிறான். ஆனால் ஓர் உண்மையை ஒப்புக் கொண்டான்! அவனுடைய முரட்டுத்தனத்துக்குக் காரணம், ஒரு சக்தி பின்னின்று அவனை ஆட்டிப் படைப்பதுதானாம்'' என்றான் ரங்கமணி.

''பேஷ், பேஷ்! அப்படியே அந்தச் சக்தி, அவனுடைய மனைவிதானா என்று கேட்டு விடுவதுதானே?''

''சேச்சே, அவசரப்படலாமா? அவனாகச் சொல்லுவான் என்றுதான் பேச்சைச் சுற்றி வளைத்துப் போட்டேன். ஆனால் சமாளித்துக் கொண்டு விட்டான்.''

''நீ கேட்டிருக்க வேண்டும். அப்போது தான் அவன் மனைவி கமலா, அவனை ஆட்டிப் படைப்பது ஊரெல்லாம் தெரிந்திருக்கிறது என்பதை உணர்வான்.''

''அதை அவனே உணருகிறானே. ஆனால், அதிலிருந்து விலக முடியாமல் திணறுகிறான். இதை அவன் வாயாலே சொல்ல வைப்பது தான் நல்லது. நாம் முந்திக் கொண்டு அவனுடைய மனைவியைப் பற்றிப் பேசுவது நாகரிகமல்ல'' என்றான் ரங்கமணி.

''நீ சாப்பிடப் போகவில்லையா?''

''இல்லே.''

''ஏன்?''

''உடம்பு சரியில்லே. பசியுமில்லே'' என்று கூறிச் சமாளித்து விட்டான் ரங்கமணி. இருவரும் பாயில் மல்லாக்கப் படுத்துக் கொண்டார்கள்.

''பகலிலேயே கும்பகர்ணன் மாதிரித் தூங்குகிறாயே! எவ்வளவு நேரமாகக் கதவைத் தட்டினேன், தெரியுமா?'' என்றான் ரங்கமணி.

''நேற்று இரவு நாடகம் பார்க்கப் போய் விட்டேன். போர்க்களம் என்று ஒரு நாடகம். அசோகரைப் பற்றிய கதை.''

''நன்றாக இருந்ததா?''

''பிரமாதமாயிருந்தது. அசோகனாக நடித்தவன் மிகவும் அருமையாக நடித்தான். அதனால் நானும் அஹிம்சாவாதியாகி விடுவேனோ என்ற பயம்கூடத் தோன்றிவிட்டது'' என்றான் சோமு உற்சாகத்துடன்.

ரங்கமணி சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தான். பிறகு சொன்னான்: ''அசோகருடைய மனமாற்றம் பெரிய சாதனைதான்!''

இதைக் கேட்டுச் சோமு சிரித்தான்.

''என்ன சாதனையைக் கண்டுவிட்டாய்? அவர் கோழையாக மாறியது ஒரு சாதனையா?''

''அவரைக் கோழை என்று சொல்ல முடியுமா? கலிங்கப் போரில் மாபெரும் வெற்றி கண்டவராயிற்றே! அசோகர் எந்தச் சமயத்தில் அஹிம்சைப் பாதையில் இறங்கினார் என்பதுதான் அதிசயம். எப்போதுமே வெற்றி, வெறியைத்தான் கொடுக்கும். ஆனால் அசோகரின் மனம் எவ்வளவு தூய்மையாக இருந்திருக்கிறது! வெற்றிப் பெருமிதத்திலிருந்த ஒரு சக்கரவர்த்தி, ஹிம்சையின் கொடுமையை உணர்ந்து புனிதரானது எப்பேர்ப்பட்ட அரிய நிகழ்ச்சி!''

''அசோகரின் நல்ல குணம் இந்திய வரலாற்றையே மாற்றும் அளவுக்குக் கேடு விளைவித்து விட்டதே'' என்றான் சோமு வெறுப்புடன்.

''ஏன்?''

''அசோகருக்கு அஹிம்சையில் ஆசை விழுந்ததும் போர்கள் நின்று விட்டன. போர்க் கலை சீர் கெட்டது. எங்கு பார்த்தாலும், காவி உடைகளும், புத்தரின் அஹிம்ஸா போதனைகளும் நிறைந்தன. இந்தியர்கள், வீரத்தை மறந்து, பலம் இழந்து கோழைகளாகி விட்டார்கள். இதைப் பயன்படுத்திக் கொண்டு விட்டார்கள் வெளி நாட்டார். நம்மை யுக யுகமாக அடிமைப்படுத்திய முதல் சக்தி இந்த அஹிம்ஸா தத்துவம் தான்'' என்று சோமு, வெறி கொண்டவனைப் போல் பேசினான். சோமுவை வியப்புடன் பார்த்தவாறு வாயடைத்து உட்கார்ந்திருந்தான், ரங்கமணி. அவன் மனத்தில் பெரும் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. 'உண்மையிலேயே அஹிம்ஸை, ஓர் உதவாக்கரைத் தத்துவம்தானா...?'

''நமக்கு இப்போது தேவைப்படுவது சாமியாராகி விட்ட அசோகரின் கதையல்ல; போர்க்களத்தில் இரத்தத்தை ருசி கண்டவர்களின் கதைகள்தாம்'' என்றான் சோமு.

ரங்கமணி, பதில் பேசாமல் பாயில் படுத்துக் கொண்டு, சிறிது நேரம் முகட்டையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''இந்தச் சமயத்தில் மனத்திலிருந்து இரக்கம், தயை என்பதையெல்லாம் உதறி எறிந்து விடவேண்டும். நாம் இப்போது இருப்பது ஒரு போர்க்களம். இதை நீ எந்தச் சமயத்திலும் மறந்து விடக் கூடாது, ரங்கமணி! அடிபடுவது இனி நமது கடமையல்ல. அடிப்பதுதான் நமது திருப்பணி. இந்திய வரலாறு முழுவதும் இதுநாள்வரை நாம் அடிபட்டது போதும். இனியாவது அடித்தோம் என்றிருக்கட்டும்'' என்றான் சோமு.

இதை ஒப்புக்கொள்வது போல் ரங்கமணி தலையை ஆட்டினான். இருந்தாலும், அந்த இரு தத்துவங்களும் அவன் மனத்தில் எப்போதும் மோதிக் கொண்டிருந்தன. அந்த மோதலில் அஹிம்ஸா தத்துவத்துக்குச் சமாதி கட்டிவிடத்தான் ரங்கமணி முயலுவான். அதில் வெற்றியும் பெற்றுவிடுவான். இருந்தாலும் அந்த வெற்றியில் அவன் மனம்நிறைவை அடைவதேயில்லை. (தொடரும்)



## அத்தியாயம் 11

# அருவிக் கரை

இளவரசி எழுந்து நடமாடத் தொடங்கியதும், மன்னன் அவளை வஞ்சி நகரத்தின் அரச வனத்திலேயுள்ள இளவந்திகை அரண்மனையிலே தகுந்த பாதுகாவலோடு இருக்கும்படி பணித்தான். ஆனால் ஆதனார் அனுப்பிய செய்தி அழலாடியின் உள்ளத்திலே எத்தகைய அதிர்ச்சியை உண்டாக்கியது என்பதும், அந்த அதிர்ச்சியினால் அழலாடி எத்தகைய துன்பத்திலே வீழ்ந்து துடித்துக் கொண்டிருந்தான் என்பதும் மன்னனுக்கோ, இளவரசிக்கோ தெரியாது.

''வாழ்விலே எனக்குப் பெண் குழந்தையைக் கடவுள் வழங்கவில்லையே என்றும், இந்த வஞ்சி அரண்மனையிலே வளர்வதற்கு ஓர் இளவரசி இல்லையே என்றும் நான் கவலைப்பட்டதுண்டு. அந்தக் கவலையைப் போக்குவதற்கே எங்கள் குல தெய்வமான கொற்றவை உன்னை இங்கே அனுப்பி வைத்தாள்!'' என்று இளவரசியிடம் மன்னன் மகிழ்ச்சியோடு கூறினான். இலவந்திகை அரண்மனையிலே அரச மாடத்தில் ஓர் இளவரசிக்குரிய எல்லா வசதிகளோடும், சிறப்புக்களோடும் இருந்தாள் இளநன்னி.

அடிக்கடி அழலாடி இலவந்திகை மாடத்துக்கு வந்து இளவரசியின் நலத்தைக் கண்டு தெரிந்து போவான். சிலவேளைகளில் இளவரசியோடு சற்று நேரம் பேசிக் கொண்டிருப்பதும் உண்டு.

# வெண்ணிலவுப் பெண்ணரசி

சோமு

ஆனால் அந்த உறவிலே ஒரு பிடிப்பு இல்லை. வாழை இலையிலே தண்ணீர் தெளித்தால் அது எப்படி உருளுமோ அப்படி இருந்தது அவனுடைய நடமாட்டம் அந்த இலவந்திகை மாடத்திலே! அன்பிலே குறைவில்லை. கவனிப்பிலே தாழ்வில்லை. என்றாலும் அவனுடைய பேச்சிலும், நடத்தையிலும் ஒரு வேகம், ஏதோ ஒரு விரைவு, எங்கோ சென்று, எதையோ முடிக்கப் போவது போல் ஒரு துடிப்பு எப்போதும் இருந்தது. இந்த நிலையை, இந்த மனவேகத்தை இளவரசியால் புரிந்து கொள்ள முடியவில்லை!

ஒரு நாள் மாலை, வயது முதிர்ந்த அரண்மனைச் சேடி ஒருத்தி மாடத்திலே நின்றுகொண்டு இளவரசியைக் கூப்பிட்டாள்.

''இளவரசியாரே! ஒவ்வொரு நாளும் மாலை நேரத்திலே நான் இதைப் பார்க்கிறேன். இதன் நுட்பம் எனக்குப் புரியவில்லை'' என்றாள் அந்தத் தோழி.

இளவரசி வந்து மாடத்திலே நின்று பார்த்தாள், தோழி குறிப்பிட்ட காட்சியை.

இலவந்திகை மாடத்துக்கு அப்பால் ஒரு சிற்றோடை. அந்தச் சிற்றோடையின் கரையிலே உயர்ந்து படர்ந்து நின்ற அழகான பாறைத் திடல். அந்தத் திடலில் உட்கார்ந்து பார்த்தால் மேற்குப் புறம் மலைத் தொடர். அந்த மலைகளுக்கு அப்பால் கதிரவன் மறையும்காட்சி தெரிந்தது.

இளவரசி மாடத்திலே நின்று கொண்டு பார்த்தாள். உயர்ந்து படர்ந்த பாறையிலே உட்கார்ந்திருந்தான் அழலாடி. அவனுடைய பார்வை மேற்கு மலைத் தொடரிலே சென்று ஒன்றியிருந்தது.

''தினந்தோறும் மாலை நேரத்தில் இங்கே வந்து இவ்வாறு உட்கார்ந்து விடுகிறார். மேற்கு மலையில் கதிரவன் மறைகிற அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டே எத்தனை நாழிகை இருக்க முடியும்! இவர் இங்கே அங்கே அசைவதில்லை! இரவு நீண்ட நேரம் ஆகியும் அவர் அந்த இடத்திலிருந்து நகருவதில்லை!'' என்றாள் தோழி.

அன்றிலிருந்து நாள்தோறும் இளவரசி அந்தக் காட்சியைப் பார்க்கத் தொடங்கினாள். ஏதோ கவிஞர்களையும் ஓவியர்களையும் பற்றிச் சொல்லக் கேட்டிருக்கிறாள் இளநன்னி! இயற்கைக் காட்சிகளிலே மனம் செலுத்திப் பொழுது கழிவதே தெரியாமல் அப்படியே உட்கார்ந்திருப்பார்கள் என்று சொல்வதுண்டு. ஆனால் அழலாடி ஏன் அப்படி உட்கார வேண்டும்? வீரம் மிகுந்த அந்த இளைஞனுடைய இதயத்திலும் கவிதையும், ஓவியமும் வாழ்கின்றனவா? போர்க் கோலம் பூண்டு எதிர் காலத்திலே இந்தத் தமிழகத்தின் வாழ்வுக்காக அரும் பெரும் செயல்கள் செய்து முடிக்க வேண்டிய அந்த மல்லனுடைய உள்ளத்திலே காவியமும் ஓவியமும் குடிபுகுந்து நின்றனவா?

இளவரசி நன்னிக்கு இது ஒரு பெரிய விந்தையாக இருந்தது. ஆனால் இது பற்றிக் கேட்கலாம் என்று எண்ணினாலோ, அழலாடி இலவந்திகை மாடத்துக்கு வருவதும் போவதும் பேசுவதும் இருப்பதும் எல்லாம் தண்ணீர்த்



துளிகள் இலையிலே உருளுவது போல அல்லவா நடக்கின்றன!

ஒரு வாரம் கழிந்தது. நாள்தோறும் அழலாடி மாலை நேரத்திலே அந்தப் பாறைக்கு வருவதும், நாழிகைக் கணக்காக மேற்கு மலையிலே பார்வையைச் செலுத்திப் பொழுது போவதே தெரியாமல் உட்கார்ந்திருப்பதும் தவறாமல் நடந்து வந்தது! அந்தக் காட்சியைக் கூர்ந்து பார்த்தபோது இளவரசிக்கு ஒரு சிறு சந்தேகம் இப்போது ஏற்படத் தொடங்கியது. காரணம், அழலாடி மேற்குத் திசையிலே பார்வையைச் செலுத்தி ஒரே ஈடுபாட்டுடன் உட்கார்ந்திருந்தபோதிலும் அடிக்கடி தன் கண்களைத் துடைத்துக் கொண்டான். சில சமயங்களில் அவன் ஏதோ துயரத்தினால் கண்ணீர் வடிப்பது போலவும் தெரிந்தது.

இளவரசிக்கு இப்போது ஆவலோடு சேர்ந்து ஒரு கவலையும் உண்டாயிற்று. எத்தனையோ பெரிய இடையூறுகளிலிருந்து தன்னைக் காப்பாற்றிய அந்த வீரன், எவ்வளவோ அன்போடும் கருணையோடும், தன் உயிரைப் பிழைக்கச் செய்த பேரன்பன் — அவனுடைய உள்ளத்தில் ஏதோ ஒரு பெருந் துயரம்! மேற்கு மலையிலே எதையோ பார்த்துப் பார்த்து மறுகுகிறான் அவன்!

இளவரசி இப்போது நன்றாகச் சிந்தித்தாள். மேற்கு மலைகளிலே கதிரவன் மறைவதைக் கண்டு இவன் எதற்காகக் கண்ணீர் வடிக்க வேண்டும்? அந்த மலைத் தொடரை இமை கொட்டாமல் இவன் ஏன் இப்படிப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும்?

எந்தப் பக்கத்திலே அழலாடியின் பார்வை சென்று கூடியிருந்ததோ அந்தப் பக்கமாகத் தனது பார்வையைச் செலுத்திக் கூர்மையாகப் பார்த்தாள் இளவரசி.

ஒரே தொடராகத் தெரிந்த மேற்கு மலைகளிலே கதிரவன் மறைந்துகொண்டிருந்தான். அவன் மறைய மறைய மலைக் காட்டிலே இருள் கவியத் தொடங்கியது. இருளினூடே இப்போது பெரிய நெருப்புத் தெரிந்தது.

இளவரசி பார்த்தாள். அழலாடியின் பார்வையெல்லாம் அந்த நெருப்பிலே சென்று கூடியிருந்தது.

இள நன்னி சிந்தனை செய்யத் தொடங்கினாள்: 'காடு திருத்துவதற்காக மலைமக்கள் இப்படி நெருப்பை எரிய விடுகிறார்கள். இதைக் கண்டு அழலாடி ஏன் கண்ணீர் வடிக்க வேண்டும்?'

துளுநாட்டு இளவரசி இளநன்னிக்குப் புரியவில்லை. மலையிலே எரிகிற நெருப்பைப் பார்த்துவிட்டு அழலாடி எதற்காகக் கண்கலங்க வேண்டும்?

'நம்மிடம் இத்தனை அன்பும் ஆர்வமும் கொண்டு நமக்கு மறு வாழ்வு தந்த இந்த அரச வீரன், ஏதோ ஒரு துயர நெருப்பில் அல்லவா விழுந்து நாளும் துடி துடிக்கிறான்!' — இவ்வாறு எண்ணிப் பார்த்தாள் இளவரசி. அவளுக்குக் கண் கலங்கியது.

ஒவ்வொரு நாள் மாலையும் அழலாடி அந்தப் பாறையிலே வந்து உட்கார்ந்து மேற்கு மலைத் தொடரிலே நெருப்பு எரிவதைப் பார்த்துக் கண்ணீர் வடிக்கும்போதெல்லாம் இளவரசி நன்னியும் அரச மாடத்திலிருந்து கலங்கிய கண்களோடு அந்தக் காட்சியைப் பார்த்து உள்ளம் துடித்தாள். ஒவ்வொரு நாளும் அப்படி உள்ளம் துடித்த போதெல்லாம் 'நாளைக்கு நானே அந்தப் பாறைகளுக்கு நடந்து சென்று இந்தத் துயரத்தின் காரணத்தை அறியவேண்டும்!' என்று மனத்திற்குள் உறுதி செய்வாள். ஆனால் மறுநாள் அதற்கு வேண்டிய துணிவு இராது! மாடத்தை விட்டு வெளியே வந்து அந்த அரசவனத்திலே நடந்து சென்று பாறைகளுக்குப் போய்ச் சேருவதற்கு வேண்டிய மனத் திடம் வராது! மௌனமாக மாடத்திலே நின்று, தானும் கண்ணீர் வடிப்பாள், இன்னவென்று தெரியாத அந்த அழலாடியின் துயரத்தை எண்ணி!

ஆம்; அழலாடி ஒவ்வொரு நாளும் அந்தப் பாறைக்கு வருவான். மேற்கு மலைகளிலே பகல் முழுதும் கண்ணுக்குத் தெரியாமல் எரிகிற காட்டு நெருப்பு இரவு கவிந்ததும் மலைக்கு மேலே நன்றாகத் தெரியும் அல்லவா? அவனுடைய உள்ளமும் அப்படித்தான். பகல் எல்லாம் அடங்கி எரிந்த துயரம் இப்போது நன்றாகப் புலனாகி எரியத் தொடங்கும். மனைவியின் உருவம் அந்த நெருப்பிலே தெரியும். மலைகளுக்கு மேலே எரிகிற காட்டு நெருப்பிலே பொன்மணி நிற்பாள் அழலாடியின் கண் முன்பு! 'முல்லை மூதூரும் இப்படித்தானே எரிந்து போயிருக்க வேண்டும்! இத்தகைய நெருப்பிலே தானே பொன்மணியும் வெந்து சாம்பலானாள்!' என்று ஒரு கணம் எண்ணுவான். அப்படியே கண்களை மறைக்கும் கண்ணீர் வெள்ளம்! அந்த வெள்ளத்துக்கு எரிகிற நெருப்பை அணைக்கத் தெரியுமா? எரிகிற நெருப்பில் எண்ணெயை விட்டது போல, மேலும் மேலும் கொழுந்து விட்டு எரியும் அந்தத் துயர நெருப்பு!

'பொன்மணி!' என்று மனத்தினுள் அழைப்பான்.

'எத்தகைய கடமையை என்னிடம் ஒப்படைத்தாய்! ஆனால் எத்தகைய துயரம் நம்மை வந்து அடைந்தது!' என்று உள்ளத்துக்குள்ளேயே புலம்புவான் அழலாடி. அப்படியே நாழிகைக் கணக்காக நேரம் போவதே தெரியாமல், அந்த மலை நெருப்பையே பார்த்துக்கொண்டு, பாறைகளிலே அசைவற்று உட்கார்ந்திருப்பான் அழலாடி. இதயம் விம்மும். உடம்பிலே துயர நெருப்புப் பிடித்து எரியும். அந்தப் பாறையெல்லாம் கொதித்து உருகும். அப்படியே அசைவற்று இருப்பான் அழலாடி.

ஒரு நாள்! இரவு நன்றாகக் கவிந்து வருகிற நேரம்! மேற்கு மலையிலே எரிகிற நெருப்பு இதயத்திலே பற்றிப் பிடித்து எரிகிறது. இதயம் விம்முகிறது. அப்போது அந்த விம்மலுக்கு ஒரு துணை விம்மலாக, இணைக் குரலாக இன்னொரு விம்மல் கேட்டது. அதிர்ச்சியோடு திரும்பினான் அழலாடி. இளவரசி நின்று கொண்டிருந்தாள்!

''என்ன இது? இளவரசியா!'' என்று கேட்டுக் கொண்டே பாறையிலிருந்து எழுந்தான் அழலாடி.

''என்ன இது! இந்த நேரத்திலே நீங்கள் இங்கே எப்படி வந்தீர்கள்?'' என்று கேட்டான் அழலாடி.

மூங்கி மூழ்கிப் போயிருந்த துயரத்திலிருந்து அவசரம் அவசரமாக வெளிவர முயன்றான் அவன்.

''என்ன இது? ஏன் இப்படி இங்கே வந்து இந்தப் பாறையிலே இத்தனை நேரம் உட்கார்ந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் இளவரசி.

''ஒன்றுமில்லை. இன்று அரச இருக்கையிலே பொழுது போகவில்லை. அதனால்—'' என்று இழுத்தான் அழலாடி.

''பொழுது போகவில்லையா? நாள்தோறுமா இப்படி? நானும் ஒவ்வொரு நாள் மாலையிலும் பார்க்கிறேன். நீங்கள் இங்கே வந்து இந்த மலைகளைப் பார்த்தவாறு இப்படியே உட்கார்ந்து உட்கார்ந்து — சொல்லட்டுமா, உட்கார்ந்து கண்ணீர் வடிக்கிறீர்கள். இதைப் பார்த்துக் கொண்டு பேசாமல் இருக்க முடியவில்லை எனக்கு. மடிந்து போன உடற் கட்டைக்கு உயிரூட்டி என்னை இந்த மனிதக் கோலத்தில் வாழச் செய்தீர்கள் நீங்கள்: ஆனால் நீங்களோ நாள்தோறும் கண்ணீர் வடிக்கிறீர்கள்! இதை எப்படிப் பார்த்துக் கொண்டிருப்பேன் நான்!''

இளவரசிக்குக் குரல் இளகிற்று. கண் கலங்கியது.

''இளவரசி! என் துயரத்தை எண்ணி நீங்கள் கலங்காதீர்கள். என் வாழ்வே ஒரு விந்தை வரலாறு. என் துயரமும் ஒரு விந்தைத் துயரந்தான். அதற்காக நீங்கள் கண்கலங்கலாகாது.'' என்றான் அழலாடி.

இளவரசி அழலாடிக்கு அருகிலே வந்து நின்று கொண்டாள்.

''நண்பரே! எத்தகைய துயரமாக இருந்தாலும் சரி. அதை வெளியிட்டுச் சொல்வதில் உள்ளத்தின் சுமை குறையத்தான் செய்யும். என்னுடைய நல்ல தன்மையில் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால் நீங்கள் கட்டாயம் என்னிடம் அதைச் சொல்லித்தான் ஆகவேண்டும். மெய்யான பாசமுள்ள தந்தையைப் போல் என்னை நேசிக்கிறார் இந்தச் சேர மன்னர். என்னுடைய உயிரைக் காப்பாற்றி அதன் மூலம் அவருடைய முழு அன்புக்கும் உரியவர் ஆகிவிட்டீர்கள் நீங்கள். அந்த மன்னருடைய அரண்மனையிலே இருந்து கொண்டு நீங்கள் இப்படி நாள்தோறும் கண்ணீர் சிந்தலாமா? உங்கள் துயரம் எதுவாக இருந்தாலும் அதைக் களைய வேண்டிய பெரும் பொறுப்பு எங்களுடைய கடமை யல்லவா?''

இவ்வாறு கேட்டாள் இளவரசி. அழலாடி ஒரு துயரச் சிரிப்புச் சிரித்தான். சொன்னான்:

''அதோ தெரிகிறதே மலை நெருப்பு. அப்படி ஒரு நெருப்பிலே எங்கள் முல்லை மூதூர் எரிந்து கருகிவிட்டது. அந்த நெருப்பிலே எரிந்து சாம்பலாகிவிட்டாள் ஒரு உத்தமி. அதோ தெரிகிற அந்த மலை நெருப்பிலே என் கண் முன் தோன்றுகிற காட்சியை உங்களுக்கு எப்படிச் சொல்லுவேன்? அதோ பொன்மணி, அந்த உத்தமி, அவள்—''

அழலாடியால் தொடர்ந்து பேச முடியவில்லை. குரல் அடைத்தது. இளவரசிக்கோ 'இதயம் முழுவதும் கண்ணீராக உருகியது. அவளும் சொல்லற்று நின்றாள்.

''நண்பரே, இந்தப் பாறையிலிருந்து சற்று நகர்ந்து செல்வோம். இந்தச் சூழலே ஒரே துயரமயமாக இருக்கிறது'' என்றாள் இளவரசி.

இருவரும் பாறையில் நடந்தார்கள். பின்புறம் மேற்கு மலைகளிலே நெருப்பு எரிந்தது. அந்தத் துயர நெருப்புக்கு அப்பால் அடுக்கு அடுக்காக மலைத் தொடர்! பெரிய மரங்கள் ஓங்கி வளர்ந்த காடு. இருவரும் நடந்து சென்றார்கள்.

''இளவரசி! கணவன் என்று மாலையிட்டதுதான் உண்டு. மற்றப்படி இந்

துக் கைகலைக்கூடப் பற்றி யறியாத பேதை அவள், பொன்மணி! குலப் பழியைத் துடைத்து நான் வெற்றி மாலை சூடித் திரும்புவேன் என்று எனக்காகக் காத்திருந்தாள், அந்தக் கோசர் குல மகள். ஆனால் மிருதிவி வைத்த நெருப்பு முல்லை மூதூரோடு சேர்த்து அந்தக் குலமகளையும் எரித்துச் சாம்பலாக்கி விட்டது!''

இவ்வாறு சொல்லிக் கொண்டே மேலே நடக்க முடியாமல் நின்று விட்டான் அழலாடி. இளவரசியும் அப்படியே நின்றுவிட்டாள்.

நீண்ட நேரம் இருவரும் சொல்லின்றி மோனத் துயரத்தில் நின்றார்கள். பிறகு இளவரசி சொல்லுவாள்:

''நண்பரே, உங்கள் துயரத்தின் வெம்மை எத்தகையது என்பதைப் புரிந்து கொண்டேன். என்ன ஆறுதல் எப்படிச் சொல்லுவது! ஆனாலும் நாளை மாலை நீங்கள் இங்கே வரும் போது, நீங்கள் தனியே இருந்து கண்ணீர் வடிக்கச் சம்மதிக்க மாட்டேன், நான்!'' என்றாள் நன்னி.

இதன் பிறகு மறு நாள் அழலாடி அந்தப் பாறைக்கு வந்தபோது, சற்று நேரத்துக்கெல்லாம் இளவரசியும் அங்கு வந்துவிட்டாள்.

''மேற்குப் பக்கமாகத் திரும்பி உட்காருங்கள். நீங்கள் அந்த மலை நெருப்பைப் பார்ப்பதே எனக்குத் துயரம் தருகிறது!'' என்றாள் இளவரசி.

இதற்கு மறுநாள் அந்தப் பாறைக்கு அழலாடி வந்தபோது, அவனுக்கு முன்னதாகவே இளவரசி அங்கே வந்து காத்திருப்பதைக் கண்டான்.

''இன்று நாம் இந்தப் பாறையிலே உட்கார்ந்திருப்பதற்கு மாறாக, இந்தச் சிற்றோடையின் கரையிலே சற்று நடந்து செல்வோம். நீங்கள் மீண்டும் அந்தத் துயர நெருப்பிலே வீழ்ந்து உருகுவதை என்னும் தாங்க முடியவில்லை!'' என்றாள் இளவரசி.

இருவரும் சிற்றோடையின் கரையோரமாக நடந்து சென்று திரும்பினார்கள் அன்று மாலையிலே.

மறுநாள் அழலாடியும் இளநன்னியும் அந்தச் சிற்றோடையைக் கடந்துசென்று தொலைவிலே 'திண் திண்' என்று குதித்து வீழும் அருவிக் கரைக்குச் சென்றார்கள்.

''நண்பரே, இந்த உலகத்தில் காடும் செடியும் மலையும் அடர்ந்த வனத்திலே நாம் இருவரும் ஆதரவற்று நிற்பது போலத் தோன்றுகிறதல்லவா? சிந்தனை செய்து பார்த்தால் நம் இருவருடைய வாழ்வுமே அப்படித்தான் இருக்கிறது.

''ஆதெள [ஜெகத்குருராம்பத்திலே, எனக்கும் பின்னாடி ஒரு தட்டிலே 12 மினாரு, 36 கந்தகண்டு, 27 முந்திரிப்பருப்பு இருந்தது. இப்ப, திரும்பிப் பார்த்தால் தட்டு காலி! ஹரே லட்சுமணு! ஹரே கோவிந்தா! யார் அதை எடுத்திருப்பான்னு புரியாத இந்த பக்தன் கதுர்றானே, யார் காதுலேயும் விழலியா?''

இக்கற்ற மலைக் காட்டிலே வாழ்வது போலத்தான் நான் அந்தத் துளு நாட்டு அரண்மனையிலே தாயற்ற குழந்தையாகத் தனியான சூழலிலே கொடுமையிலும் வஞ்சகத்திலும் சிக்கி வழி நடந்தேன்! ஆனால் ஒரு சிறு வித்தியாசம் உங்களுக்கும் எனக்கும்! எனக்கு அன்பு செய்ய மனிதர்கள் இல்லை. உங்களுக்கோ அன்பு செய்ய மனிதர்கள் வாய்த்திருந்தும், அந்த அன்பை அடைய முடியாதபடி ஊழ்வினை வஞ்சித்து விட்டது. இருவருமே அன்பை அறியாதவர்கள்தான். என்வரையில் அன்று நீங்கள் என்னைக் காப்பாற்றியதும், என் மறு வாழ்வுக்காக நீங்கள் இத்தனை பாடுபட்டதும், இதுவரை இல்லாத அன்பின் புதிய அனுபவங்கள். அதனால்தான் அதை எண்ணி எண்ணி என் நெஞ்சம் உருகுகிறது!'' என்றாள் இளவரசி.

''இளவரசி! அன்பைப் பற்றிச் சொல்லுகிறீர்கள். இதுவரை மல்லர்களையும் வீரக் காளைகளையும் எதிர்த்துப் போராடியே பழகியவன் நான்.. மென்மையான அன்பையே தொட்டறியாத வாழ்வு என் வாழ்வு! அதனால்தான் அன்று உங்கள் நாடியைப் பரிசோதித்துப் பார்க்க முயன்ற போது, முயன்றபோது—''

சொற்களை முழுதும் சொல்ல முடியாமல் தயங்கினான் அழலாடி.. இளவரசி ஆவலோடு அவனை உற்றுப் பார்த்தான்.

(தொடரும்)

பல்சுவைப் பக்கம்-1



## பார்த்திருக்கிறீர்களா?

செல்லாக் காசு, கடல் குதிரை, பச்சைக் குட்டி, எருமை நாக்கு, மட்டி வாய், நாய் கடிச்சே, பில்லரிஞ்சான், செந்தும்பி, கட்டுப்பிரியன் உள்ளம் ஆ யெவைகளைப் பார்த்திருக்கிறீர்களா?

நீங்கள் நினைப்பதுபோல் செல்லாக் காசு நாணயமல்ல. எருமை நாக்கு மாட்டின் நாக்கு அல்ல. பின் என்ன என்று கேட்கிறீர்களா? எல்லாம் மச்ச நாமாவளிதான்! ஆம், எல்லாம் மீன்களின் பெயர்களே.

—குத்தாலம் வி. சம்பந்தன்

## உரிமை கிடையாது!

பெயர் பெற்ற ஜெர்மன் நாவலாசிரியர் தாமஸ் மேன் என்பவர் ஒரு சமயம் அமெரிக்காவுக்குச் சென்றிருந்தபோது ஓர் அமெரிக்க எழுத்தாளர் அவரைப் பார்க்க வந்தார். அவர் மேனிடம், ''தங்களைப் போன்ற கல்லூரி முன்னிலையில் நான் ஓர் அற்ப ஆசிரியன்'' என்று மிகுந்த பணிவுடன் கூறினர். அவர் விடைபெற்றுக் கொண்டு போன பின்னர் தாமஸ் மேன் தாம் தங்கியிருந்த வீட்டாரிடம், ''ஆனாலும் இவ்வளவு அவையடக்கத்துடன் தம்மைச் சிறியவராக வர்ணித்துக் கொள்ள இவருக்கு உரிமை கிடையாது. இவர் அந்த அளவுக்குப் பெரியவர் அல்லவே?'' என்று கூறினர்.

தகவல்: பெ. முத்துக்குமரன்

குழந்தாய்! ஒரு விஷயம் நீ நினைவு வைத்துக் கொள். நீ பிறந்தபோது எல்லோரும் சிரித்துக்கொண்டிருந்தார்கள்; நீ அழுதுகொண்டிருந்தாய். குழந்தை பிறந்தால் வீட்டில் உள்ளவர்கள் மகிழ்கிறார்கள்; குழந்தை அழுகிறது என்பதைக் கண்டிருப்பாயே! நீ இறக்கும் பொழுது எல்லோரும் அழவேண்டும்; நீ சிரித்துக்கொண்டே போய்விடவேண்டும். அப்படி வாழக் கற்றுக்கொள்.

- ஷேக் ஸாதி

## நாலு நல்ல வார்த்தைகள்!



ஹோட்டலுக்கு வந்து உட்கார்ந்தவரைப் பார்த்துச் சர்வர் கேட்டான்: ''உங்களுக்கு என்ன வேண்டும்?''

''இரண்டு இட்லியும் நாலு நல்ல வார்த்தையும்.''

சர்வர்: (இரண்டு இட்லியைக் கொண்டு வந்து வைத்துவிட்டு) ''வேறு என்ன கேட்டீர்கள்?''

''நாலு நல்ல வார்த்தை கேட்டேனே?''

சர்வர் சுற்று முற்றும் பார்த்துவிட்டு, அவர் காதருகில் குனிந்து சொன்னான்: ''இதை நீங்கள் சாப்பிட வேண்டாம்!''

- 'ரதன்'

## பதினொரு மீட்டர் நீளமுள்ள புத்தர் சிலை



சோவியத் தாஜிக்ஸ்தானில், அண்மையில் சயன நிலையில் உள்ள பிரம்மாண்டமான புத்தர் சிலை ஒன்று தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களால், அஜினா—தேபே குன்றுகளின் சதுப்பு அடுக்குகளிடையே கண்டு பிடிக்கப்பட்டது. இப் பிரம்மாண்டமான உருவத்தை ஆய்வாளர்கள் சந்தித்ததே மிகவும் சுவாரசியமான நிகழ்ச்சி! அவர்கள் பூமியைத் தோண்டும் போது, 2 மீட்டர் நீளமுள்ள பெரிய 'பாத'த்தைக் கண்டனர். முழுச் சிலை உருவத்தையும் பாதுகாப்புடன் வெளியே எடுக்கச் சுமார் ஓராண்டு ஆயிற்று. இதற்குப் பெரிய அளவில் ரசாயனப் பொருள்களும் தேவைப்பட்டன. இதில் அநுபவமுள்ள நிபுணர்கள்ஈடுபட்டனர்.

பூமிக்கடியே நித்திரையிலிருந்த இப்பெரிய உருவம் 1300 ஆண்டுகளுக்குப் பின் வெளிச்சத்தைக் கண்டது. 11 மீட்டர்கள் நீளமுள்ள சயன நிலையில் உள்ள இச்சிலையின் பீடம் களிமண்ணால் ஆனது. ஆடையின் நெருங்கிய மடிப்புக்கள் தாழத் தவழ்கின்றன. வலது கரத்தின் மீது அவர் தலை வைத்துச் சயனித்திருக்கிறார்.

இந்தத் தூங்கும் புத்தர் சிலைதான் மத்திய ஆசியாவில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள மிகப் பெரிய சிலையாகும். அஜினா—தேபே குன்றுகளில் இதரக் கண்டுபிடிப்புகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போன்று அமைந்துவிட்டது இந்த அபூர்வச் சிலை.

## மண்ணும் பண்பாடுமே!



'கஸசஸ்தான்' அருகிலுள்ள 'இலி' ஆற்றங்கரையின் மணற் குன்றுகள் தனித்துவம் வாய்ந்தவை. இம்மணல் பாடுகிறது! இம்மணலை ஒரு சாக்கில் கொட்டினால் ஒருவித 'சங்கீத ஒலி' வருகிறது!

வெய்யிற் காலங்களில், வெய்யிலின் காரணமாக இந்த மணலில் மின் சக்தி உண்டாகிறதென்றும், அப்போது அவை ஒன்றோடொன்று உராய்ந்து கொள்வதால் இப்படிச் சப்தம் எழுகிறது என்றும் விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

ஆதாரம்: 'ஸ்புட்னிக்' தகவல்: வி. சம்பத்குமார்

## இதோ காரணம்!

ஹாம்ஸ்டர்டாமில் உள்ள அரும் பொருட் காட்சிசாலையைக் காண வருபவர்கள் அங்கு வைக்கப்பட்டுள்ள பார்வையாளர் புத்தகத்தில் தங்களது பெயரையும், இதர விவரங்களையும் எழுத வேண்டும். ஒருசமயம் அப் புத்தகத்தில் 'வருகைக்குக் காரணம்' என்னும் விருவுக்கு ஒருவர் எழுதி யிருந்தார்: "வெளியில் மழை பெய்து கொண்டிருக்கிறது" என்று!

- ஏ. கே. கந்தசாமி

## வழுக்கைத் தலைக்குச் சலுகை!

இங்கிலாந்தைச் சேர்ந்த பிரைட்டன் நகரிலுள்ள ஒரு முடிதிருத்தும் நிலையத்தில் இப்படி ஒரு கட்டணப் பட்டியல் பலகை தொங்குகிறது.




ஆதாரம்: 'டெய்லி ஸ்கெட்ச்' தகவல்: வி. சம்பத்குமார்

## பென்சில் போட்ட கோடு!

ஒரு புதிய பென்சிலை எடுக்கிறீர்கள். நீள நீளக் கோடு போட ஆரம்பிக்கிறீர்கள். முனை உடையாமல், சீவும்போது பென்சில் ஊக்கு வெட்டப்படாமல் கோடு இழுத்துக் கொண்டே இருக்கிறீர்கள். அதிலுள்ள ஊக்கு முழுவதும் தேய்ந்து போகும் வரை கோடு போடுகிறீர்கள். நீங்கள் போட்ட கோடுகளின் மொத்த நீளம் எவ்வளவு தெரியுமா? 28 மைல்; 4 மைல்; 35 மைல் எது சரி? ஊகியுங்கள் பார்க்கலாம். தெரியாவிட்டால் பத்திரிகையைத் தலைகீழாகத் திருப்பிப் பாருங்கள். — டி. வி. என்.

பென்சில் போட்ட கோடு விடை: 35 மைல்கள்.

## பண விஷயம்!

பணம் சம்பாதிக்க முயன்றால் பணத்தாசை பிடித்தவன். பணத்தைச் சேமித்து வைத்தால் முதலாளி. பணத்தைத் தாராளமாகச் செலவழித்தால் ஊதாரி. பணம் சம்பாதிக்கத் தெரியா விட்டால் பைத்தியக்காரன். பணத்தைச் சிரமமின்றிச் சம்பாதித்தால் அயோக்கியன். கஷ்டப்பட்டுச் சம்பாதித்துச் சேமித்து வைத்தால் முட்டாள். இப்படித்தானே உலகம் முடிவு கட்டுகிறது!

ஆதாரம்: டைம்ஸ் ஆப் இந்தியா.
தகவல்: க. ரவிச்சந்திரன்

## மந்திரி வேலை பார்க்கும் மாணவன்

மாணவனாக இருந்துகொண்டு மந்திரி வேலையும் பார்க்க முடியுமா? முடியும்! மேற்கு ஜெர்மனியில் இந்த அதிசயம் நிகழ்ந்திருக்கிறது. பிரான்ஸ் - ஜோஸப் ஸ்டிராஸ், பொருளாதாரத் துறையில் பிஎச். டி. பட்டம் வாங்குவதற்காகப் படிக்கிறார். ஆனால் அதே சமயத்தில் நிதி அமைச்சராகவும் பதவி வகிக்கிறார். அவருக்கு வயது 51. - யு.பி.எஸ்.

# இந்திய ஜனநாயகத்தின் எதிர்காலம்

க. சந்தானம்

வயதுவந்தோருக்கு வோட்டுரிமை என்ற முறை, மொத்தமாகப் பார்க்கும்போது சரியானதே என்பது இந்தத் தேர்தலில் நிரூபிக்கப்பட்டு விட்டது. தேர்தலில் காணப்படும் முதலாவது உண்மை இதுதான் என்பதை யாரும் ஒப்புக் கொள்ளுவர். ஜனநாயகத்துக்கு இது ஒரு நிச்சயமான லாபம். ஒவ்வொரு தொகுதியிலும் வாக்காளர்கள் விவேகமாகவோ தங்களுடைய நன்மைக்கு உகந்தது என்ற கருத்திலோ தங்கள் உரிமையை ஒரே சீராகப் பயன்படுத்தினார்கள் என்று இதிலிருந்து கொள்ள வேண்டியதில்லை. பண பலம், மிதமிஞ்சிய செல்வாக்கு, ஜாதி இனப் பிரிவு உணர்ச்சிகள், பொய்யான வாக்குறுதிகள், கோபதாபங்கள் வெறுப்புணர்ச்சிகள் — இவையெல்லாம் வாக்காளர்களின் மனத்தைக் கலக்கவும் மாற்றவும் செய்தன. இந்தத் தீய சக்திகள் அறவே இல்லாமல் இருந்திருந்தால், தேர்தல் விளைவுகள் எவ்விதமாக எந்த அளவுக்கு மாறுபட்டிருந்திருக்கும் என்று உத்தேசமாகக்கூடச் சொல்ல முடியாது. இவற்றை அடியோடு ஒழித்து விடவும் முடியாது.

இது சாத்தியமாகாத காரியம். ஆகையால் இவை இல்லாதிருந்தால் விளைவுகள் எப்படி மாறியிருக்கும் என்ற ஹேஷ்யம் பயனற்றது. இத்தீய சக்திகளின் ஆதிக்கம் படிப்படியாகக் குறைவதற்கு நடவடிக்கைகளும் முயற்சிகளும் மேற்கொள்ளுவது விரும்பத்தக்கதாகும். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயமாகச் சொல்லலாம். இத்தீய சக்திகளின் ஆதிக்கம் இந்தத் தேர்தலில் குறைந்த அளவில்தான் செயல்பட்டிருக்கிறது. நாட்டின் தற்போதைய நிலைமை குறித்தும், இதற்குக் காரணமாயிருந்தவர்கள் குறித்தும் வாக்காளர்கள் தங்கள் தீர்மானமான அபிப்பிராயத்தைத் தெளிவாகவே அறிவித்திருக்கின்றனர் என்பது தேர்தல் முடிவுகளிலிருந்து தெரிகிறது. காங்கிரஸ் அல்லாத கட்சிகள் விஷயத்தில் அவற்றின் தேர்தல் விஞ்ஞாபனக் கருத்துக்களின் பேரிலும் அவற்றின் சார்பில் நின்ற அபேட்சகர்களுடைய நாணயம், செய்திறன் ஆகியவற்றின் பேரிலும் வாக்காளர்கள் மதிப்பீடு செய்ய வேண்டியிருந்தது. ஆனால் ஆளும் கட்சியையும் அவர்கள் சார்பில் நின்ற வேட்பாளர்களையும் பொறுத்த மட்டில் அவர்களது வெற்றி தோல்விகளை மதிப்பிட்டு இத்தேர்தல் தீர்ப்பு வழங்கியிருக்கிறது. பல்வேறு ராஜ்யங்களில் இத்தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்கு ஏற்பட்ட வெற்றி தோல்விகள் அதனுடைய சாதனைகளுக்குச் சம்பந்தமில்லாதவாறு ஏற்பட்டிருக்கின்றன என்று பல இடங்களில் வாதிக்கப்படுகிறது. இவ்வாறு சொல்லும்போது வாக்குப் பதிவுகள் எல்லாம் முக்கியமாக ராஜ்யவாரி அடிப்படையிலேயேதான் நடைபெற்றிருக்கின்றன என்பதையும், ஒவ்வொரு ராஜ்யத்தின் வாக்காளர்களும் தங்களுடைய கஷ்டங்கள், குறைகள், ஏமாற்றங்கள் ஆகியவற்றைக் கொண்டே தீர்ப்பளித்திருக்கின்றனர் என்பதையும் மறந்துவிடக் கூடாது. எல்லா இடங்களிலுமே வாக்காளர்கள் சரியானபடி தீர்ப்பு வழங்கி விட்டார்கள் என்று கூறுவதற்கில்லை. இதற்காக அங்கலாய்க்கத் தேவையில்லை. இது பெரிய விஷயம் அல்ல. முக்கியமான விஷயம் என்னவென்றால் இந்தியா முழுவதிலும் வாக்காளர்கள் இம்மாதிரியான ஒரு தீர்ப்பை வழங்கச் சக்தி பெற்றுவிட்டனர் என்பதுதான். இதுதான் ஜனநாயகத்தின் ஜீவாதாரமாகும்.

இந்த வகையில் நோக்கும்போது இந்நாட்டில் ஜனநாயகத்தின் எதிர்காலம் குறித்து மிகுந்த நம்பிக்கையும் உற்சாகமும் கொள்ள இத்தேர்தல் இடம் தருகிறது.

குறிப்பிடத்தக்க இரண்டாவது முக்கியமான விளைவு மத்திய பீடத்திலும் ராஜ்யங்களிலும் ஒரே கட்சியின் ஆட்சி முடிவின்றி நீடிப்பதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்திருப்பதாகும். தேர்தலுக்குப் பின் தோன்றியுள்ள இந்நிலையே இனியும் நீடிக்கும் என்று எதிர்பார்ப்போம். எவ்வளவுதான் நல்லெண்ணத்துடனே ஒரு கட்சி செயல்பட்டாலும், நீண்ட காலமாக அநுபவித்து வரும் அதிகாரமும் செல்வாக்கும் அதனைச் சீரழித்துத் தரம் குன்றிப் போகச் செய்யும்.

ஆட்சி பீடத்தில் அமருபவர்கள் பொறுப்புடன் செயலாற்ற வேண்டும் என்கிற நிபந்தனை அரசியல் நிர்ணயச் சட்டப்படி உண்டு என்றாலும் இப்படி அவர்கள் நடந்து கொள்ளுமாறு வாக்காளர்கள் நிர்ப்பந்தப்படுத்தக்கூடிய சூழ்நிலை உருவானாலன்றி நற்பலன் ஏதும் விளையாது.

ஒரே கட்சி நீடித்து ஆண்டால், அரசாங்கத்தின் கொள்கைகளை வகுப்பதிலும், நேர்மையான ஆட்சி நடப்பதிலும் மக்களின் உணர்ச்சிகளுக்கு ஆட்சியாளரைச் செவிமடுக்கச் செய்வதிலும் நல்ல பலன் கிடைக்காமல் போய் விடுகிறது. இந்த நிலை இப்போது மாறி உள்ளது. தங்களுடைய சாதனைகளை மக்களின் பரிசீலனைகளுக்கு விட வேண்டியதில்லை; அவற்றின் மீது மக்களின் தீர்ப்பு அவசியமில்லை என்று எந்த மத்திய அரசாங்கமும் இதுவரையில் இருந்தது போல் இனிமேலும் எண்ணிக் கொண்டு தனது கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டு வாளாவிருந்துவிட முடியாது. ஜனநாயகத்தின் வளர்ச்சிக்கு இது மிகப் பெரிய லாபமாகும். இதை இந்தத் தேர்தல் அளித்திருக்கிறது.

இந்த பாபங்கள் எத்தகையவை, எவ்வளவு மகத்தானவை என்பது சென்னை மாநிலத் தேர்தல் விளைவுகளைப் பற்றிச் சிந்தித்தால் தெரிய வரும். தேர்தல்கள் தொடங்குவதற்குமுன், காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் அனைவரும் 'அடுத்த இருபத்தைந்து ஆண்டுகளுக்குத் தங்களை யாராலும் பதவியிலிருந்து அசைக்க முடியாது; எதிர்க்கட்சிகள் யாவுமே




நிர்வாகம் நடத்தத் திறமையற்றவை; ஆகவே வாக்காளர்கள் காங்கிரஸ் கட்சியின் சில தவறுதல்களைப் புறக்கணித்து, அவர்கள் செய்துள்ள நலன்களை மட்டுமே கருத்தில் கொண்டு, அவர்களுக்கே வோட்டு அளிக்க வேண்டும்' என்று பிரசாரம் செய்தார்கள். இந்தப் பிரசாரத்துக்குப் பக்கபலமாக, அமோகமான பணச் செலவும் செய்யப்பட்டது. இவர்களது 'சோஷலிஸ' லட்சியங்களைப் பிரசாரப்படுத்தப் பயனுறிய ஏராளமான இந்தப் பணம், சோஷலிஸ்டு லட்சியங்களுக்கு எதிரிகள் என்று இவர்களாலேயே குற்றம்சாட்டப்பட்ட கம்பெனிகளிடமிருந்தும் தனி நபர்களிடமிருந்தும் வசூலிக்கப்பட்டது. வாக்காளர்கள் ஏமாந்து போகவில்லை. விலைவாசியின் உயர்வுகளுக்கும், வளர்ந்து கொண்டே போகும் மக்களின் கஷ்டங்களுக்கும் காங்கிரஸ் கட்சிதான் முழுப் பொறுப்பு ஏற்க வேண்டும் என்று அவர்கள் முடிவு செய்திருக்கிறார்கள். காங்கிரஸ் கட்சியின் சோஷலிஸப் பேச்சுக்களில் அவர்கள் நம்பிக்கை வைக்கவில்லை. புதிதாய்ப் பதவிக்கு வந்துள்ள தி.மு.க.வின் இதரக் குறைகளும் நிறைகளும் எப்படி இருப்பினும், வாக்குறுதிகளும் நடைமுறையும் இணைந்து செயல்படத் தாங்கள் முயலவில்லையானால், இப்போது காங்கிரஸ் கட்சிக்கு ஏற்பட்ட நிலைமை தங்களுக்கும் ஏற்படக்கூடும் என்பதை மட்டும் மறக்கமாட்டார்கள். பொறுப்புள்ள அரசாங்கம் என்பது சொல்லளவில் மட்டுமின்றி நடைமுறையில் முதல் தடவையாகச் செயல்பட ஆரம்பித்திருக்கிறது. இந்த பாடம் விலைமதிப்பற்றது.

இவையனைத்தும் இருட்டிலொளிக்கும் அம்சங்கள். ஆனால் இவற்றுக்கு எதிராக வேலை செய்யும் சக்திகளும் நாட்டில் இயங்கிக் கொண்டிருக்கின்றன. அவை பலமுள்ளவை, பயங்கரமானவை. அவற்றின் சக்தியைக் குறைத்து மதிப்பிடக் கூடாது. அவற்றைக் கட்டுப்படுத்தத் தீவிரமான தொடர்ந்த நடவடிக்கை அவசியமில்லை என்று நினைப்பதும் தவறுதலே ஆகும்.

முதலாவது, உள்நாட்டில் திருப்திகரமான முறையில் அமைதி நிலவவில்லை. சென்ற இரண்டு ஆண்டுகளில் சட்ட ஒழுங்குப் பிரச்னைகள் அதிகமாகிக் கொண்டே வந்துள்ளன. இதற்கு ஒரு காரணம், ஆளும் கட்சியிடம் போதுமான உறுதியும் கண்டிப்பும் காணப்படாதது என்று சொல்லலாம். ஆனால் இப்போது அதிக பலத்துடன் மத்திய சட்டசபையிலும், ராஜ்ய சட்டமன்றங்களிலும் வெற்றி பெற்று வந்துள்ள எதிர்க்கட்சியினர் இத்தகைய அமைதிச் சீர்குலைவைத் தீவிரமாக ஊக்குவித்தனர் என்பதை மறுக்க முடியாது. வேலை நிறுத்தங்களையும், கிளர்ச்சிகளையும் ஆர்ப்பாட்டங்களையும் தொடங்கி நடத்தினர். அமைதியைக் காக்கப் போலீஸ் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளில் காணப்பட்ட சிறு தவறுகளை மிகைப்படுத்திக் காட்டி அதற்கும் கிளர்ச்சிகள் நடத்தினர். தேர்தலுக்குப்பின் காங்கிரஸ் கட்சி ஆட்சிக்கு வந்துள்ள ராஜ்யங்களில் அமைதியைப் பாதுகாப்பதில் அவர்களுடைய வலிமை முன்னிலும் குன்றிப் போயிருக்கிறது. கூட்டு ஆட்சிகள் நடைபெறும் கேரளம், மேற்கு வங்காளம் போன்ற ராஜ்யங்களிலோ அமைதியைக் குலைப்பவர்களைத் தட்டிக் கேட்டு அடக்குவதில் விருப்பமோ உற்சாகமோ ஆட்சியிலுள்ளோர் காட்டுவார்களா, அதற்குத் தேவையான மன உறுதி அவர்களிடம் இருக்கிறதா என்பனவெல்லாம் சந்தேகமே. இந்த நிலையில், புதிய சென்னை அரசாங்கமும், ஒரிஸ்ஸா அரசாங்கமும் உறுதியான நடவடிக்கைகள் மேற்கொள்ள நியாயமான அதிகாரம் பெற்றுள்ளவர்களாக விளங்குகிறார்கள். ஆகவே மற்ற ராஜ்யங்களுக்கு முன் மாதிரியாக விளங்க வேண்டிய நிலையில் இருக்கின்றனர் இவர்கள்.

இதுவரையும் ஒரே கட்சியின் ஆதிக்கத்திலேயே மத்திய அரசாங்கமும் ராஜ்ய அரசாங்கங்களும் இயங்கியதால் யூனியன்—ராஜ்ய உறவுமுறைகளும் வரையறைகளும் தெளிவற்றுக் குழம்பிக் கிடந்தன. இவ்விஷயத்தில் இப்போது திட்டவட்டமான கொள்கைகளை உருவாக்க வேண்டியது அவசியமாகிறது. அரசியல் அமைப்புச் சட்டத்தில் ராஜ்யங்களுக்கும் யூனியன்களுக்கும்



உள்ள பொறுப்புக்களையும், கடமைகளையும் பாகுபாடு செய்திருப்பதை எல்லாக் கட்சிகளும் அங்கீகரித்து அவற்றின்படியே நடக்கத் தயாராக இருப்பது வரவேற்கத்தக்க அம்சம். கடந்த ஆண்டுகளில் ஒருபுறம் மத்திய அரசாங்கத்தினிடம் நிதி அதிகாரம் எல்லாமே குவிவதும், மறுபுறம் ராஜ்யங்கள் அவற்றின் எல்லாத் தேவைகளுக்கும் மத்திய

# புதியது!

வசதியானது

## வைடமின் ஸி செறிந்துள்ள

## இனிப்பான பானம் !



நாசுக்கான வாழ்வைச் சுவைக்க இன்றைய நவீன வழி பால்டாப். அது அலாதியான சுவையுள்ள இனிப்பு பானம். பாட்டில்கள் இல்லை. சேமிப்புத் தொல்லைகளும் இல்லை. ஒரு தம்ளர் குளிர்ந்த நீரில் ஒரு பால்டாப் வில்லையைப் போட்டாலே போதும்! தயாராகிவிடும்! புத்துணர்ச்சியூட்டும் பானம்! அதி உன்னதம்!

மறவாதீர்கள், சர்க்கரை கலவாத பால்டாப். உடம்பைப் பெருக்கவைக்கும் தாதுப்பொருள்கள் இல்லாதது. அருந்தி, அருந்தி, மகிழுங்கள் ஆசை தீர!

# பால்டாப்

## இனிப்பான பான வில்லைகள்

எல்லா முக்கிய கடைகளிலும் கிடைக்கிறது

உங்கள் நம்பிக்கைக்குகந்த  பூட்ஸ் தயாரிப்பு



MAS 6654

# விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பு

**வலியை அதி வேகமாக**

**வெளியேற்ற**

# புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'

இப்பொழுது முதன்முதலாக இந்தியாவில் வழங்கப்படுகிறது

[illegible]

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்




[illegible]




[illegible]

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதிசக்திமையான வலிநிவாரணியாகும்.






புதிய

மைக்ரோஃபைன்ட்

'ஆஸ்ப்ரோ'

அதி வேகமாக
வலியை வெளியே
இழுத்துவிடுகிறது

நிக்கோலஸ் தயாரிப்பு

அரசினிடம் முறையிடுவதுமான போக்குகளால் பல தவறான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுவிட்டன. இவற்றைத் திருத்துவது சிரம சாத்தியமான காரியம். ஆனால் எப்படியும் இதைச் செய்துதான் ஆக வேண்டும். இல்லாவிடில் காங்கிரஸ் அல்லாத பல ராஜ்ய அரசுகளுக்கும் காங்கிரஸ் மத்திய அரசுக்குமிடையே மோதல் ஏற்பட்டு, ஆட்சிகள் ஸ்தம்பிக்கும் நிலைமை ஏற்படக்கூடும்.

நாட்டின் நிதி நிலைமை, முக்கியமாக ராஜ்யங்களின் நிதி நிலைமை மிக மோசமாக இருக்கின்றது. தேர்தலுக்குச் சற்று முன்பு சர்க்கார் சிப்பந்திகளின் சம்பளங்களையும் உயர பஞ்சப்படிகளையும் உயர்த்தியதன் மூலம் பொருளாதாரச் சுமை அதிகமாக்கப்பட்டிருக்கிறது. மேலும் காங்கிரஸ் அல்லாத கட்சிகளோ வரிச் சுமைகளைக் குறைக்கப் போவதாக வாக்குறுதிகள் அளித்துப் பதவிக்கு வந்துள்ளனர். கொடுத்த வாக்குறுதிகளை அவர்கள் நிறைவேற்றியாக வேண்டும். இதைச் செய்யுங்கால், சமூக நலன்களுக்கான செலவுகளுக்குப் பணத் தட்டுப்பாடு ஏற்படும். இந்நிலையில் இந்தத் துறையில் அவர்கள் கொடுத்துள்ள வாக்குறுதிகளை நிறைவேற்றக் கஷ்டப்படுவார்கள். நிர்வாகத்தில் சிக்கனமும், நேர்மையும் ஏற்பட்டுவிட்டால், இவற்றைக் காட்டிச் சாத்தியமாகாத இதர வகைகளில் குறைபாடுகளைப் புறக்கணித்துவிடும்படி கேட்டுக் கொள்ளலாம். சில வாக்குறுதிகளை நிறைவேற்றுவது சாத்தியமாகலாம். உதாரணமாக நில வரி ஒழிப்பு. இதனால் ஏற்படும் நஷ்டத்தை இதர வரி வகைகளில் ஈடுகட்டிக் கொள்ளலாம். ஆனால் மக்களிடம் செல்வாக்கை வளர்த்துக் கொள்ள இப்புது வரிகள் உதவாது.

கூட்டு ஆட்சிகள் எல்லாம் அடுத்த ஐந்தாண்டு காலம் முழுவதும் செயல்படும் என்று சொல்ல முடியாது. மிகக் குறைவான 'மெஜாரிட்டி' பலத்துடன் செயல்படும் இதர ஒரு கட்சி அரசாங்கங்களும் கவிழ்ந்து போகக் கூடும். ஆகவே, பல ராஜ்யங்களில் இடைக்காலப் பொதுத் தேர்தல் நடைபெறுவது சாத்தியமே. அதற்கு நாடு தயாராகவே இருக்க வேண்டும். ஜனாதிபதி ஆட்சியைப் புகுத்தி அம்மாதிரி நிலைமையைச் சமாளித்துவிடுவது சுலபமான வழி என்று தோன்றும். ஆனால் என்னுடைய அபிப்பிராயத்தில் அவ்வாறு செய்வது பெரும் தவறே. ஜனாதிபதியின் ஆட்சி சில ராஜ்யங்களில் ஓர் ஆட்சி முறையாகவே ஆகிவிட்டால், இது ஜனநாயகத்தையே அடியோடு தகர்த்துவிடும். கொஞ்சம் கொஞ்சமாக எல்லா ராஜ்யங்களுக்குமே ஜனாதிபதி ஆட்சி நிரந்தர ஆட்சியாக மாறி, முடிவில் ராஜ்யங்களிலிருந்து மத்திய அரசாங்கத்துக்கும் ஏகாதிபத்திய ஆட்சி பரவ அது வகை செய்துவிடும்.

காங்கிரஸ் தலைமைப் பீடத்திலுள்ளவர்கள் வருங்காலத்தில் எவ்விதம் நடந்து கொள்ளுகிறார்கள் என்பதையே பெரும்பாலும் பொறுத்திருக்கிறது இந்தியாவில் ஜனநாயகத்தின் எதிர்காலம். அடிபட்ட புலி போல, பழி வாங்கும் எண்ணத்துடன் அது நடந்து கொண்டால்; ஜனநாயக முறையில் அதற்கு ஏற்பட்ட ஆட்சிப் பொறுப்பையோ எதிர்க்கட்சிப் பொறுப்பையோ சீரான வகைகளில் நிறைவேற்றத் தவறினால்; அல்லது மக்கள் விருப்பத்துக்கிணங்கி மற்றவர்களுடன் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ள முன்வராமல், முழு அதிகாரத்தையும் தானே வைத்துக் கொள்ளும் பேராசையுடன் செயல்படுமேயானால் காங்கிரஸ் கட்சி நிச்சயமாக நாசமடைந்து செத்துத்தான் போகும். தான் நசிப்பதுடன் ஜனநாயகத்துக்கும் உயிராபத்தான காயங்களை ஏற்படுத்திவிடும். இதுவே நம் முன் நிற்கும், நம்மை உடனடியாக அச்சுறுத்தும் மிகப் பெரிய அபாயம். ஆனால் காங்கிரஸ் கட்சியில் இன்னமும் சில விவேகிகளும், தேசப் பற்றுள்ள உண்மையாளர்களும் இருக்கின்றனர். அவர்களுக்குச் செல்வாக்கும் இன்னமும் குன்றவில்லை. அவர்களால் இந்த ஸ்தாபனத்தில் ஊன்றிவிட்ட அதிகாரப் பிசாசையும் அகங்கார ஆணவங்களையும் அகற்றிவிட முடியும் என்று நம்புகிறேன். இவர்கள் நாட்டில் நிலையான, உறுதியான ஜனநாயகத்தை வளர்க்க காங்கிரஸுக்கு நல் உபதேசம் செய்து வழி காட்டுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.



## பரீட்சை இல்லாமல் பட்டம் பெறலாம்!

ஸ்காட்லாந்தில் விரைவில் திறக்கப்படப் போகும் பல்கலைக் கழகத்தின் மாணவர்கள் பரீட்சை எழுதாமலே பட்டம் பெறலாமே! இந்தப் பல்கலைக் கழகத்தில் பரீட்சையே கிடையாது. மாணவர்கள் வகுப்பில் படித்துப் புரிந்து கொள்ளும் முறையையும், நடத்தையையும் பார்த்துப் பட்டம் கொடுப்பார்கள், இந்தப் பல்கலைக் கழகத்தில். சில மணி நேரமே நடக்கும் பரீட்சையைக் கொண்டு மாணவனின் திறமையை அறிய இயலாது என்கிறார் அக் கல்லூரி முதல்வர்.

ஆதாரம்: அமிர்தபஜார் பத்திரிகா

தகவல்: ச. ஸ்ரீதரன்

# ஜம்ஷெட்பூர் எஃகுத் தொழிலாளிகள் 'சிரமவீர்' தேசீய விருதுகள் பெறுகிறார்கள்

இந்தியாவின் புதிய வீரர்களை — டெக்னீஷியன்களையும், ஆலைத் தொழிலாளிகளையும்—பெருமைப்படுத்துவதற்காக மார்ச் 1966ல் முதலாவது விழாவை நமது அரசாங்கம் நடத்தியது; 'சிரமவீர்' தேசீய விருதுகள் வழங்கி அவர்களைப் பாராட்டியது. குறைந்த செலவில் அதிக உற்பத்திக்கு வழி செய்யும் யோசனைகளுக்கு ஊக்கம் அளிப்பதற்காக ஒவ்வொரு ஆண்டும் இப்பரிசுகள் வழங்கப்படும்.

இந்த ஆண்டு வழங்கப்பட்ட 27 விருதுகளில் இரு முதற் பரிசுகள் உட்பட ஐந்து பரிசுகள் டாடா ஸ்டீல் தொழிலாளிகளுக்குக் கிடைத்திருக்கின்றன. இந்நாட்டிலேயே அதிகமான விருதுகள் பெற்றுள்ள தனியொரு ஸ்தாபனம் இதுதான்.

ஜம்ஷெட்பூர்த் தொழிலாளிகள் கடந்த 20 ஆண்டுகளில் 12000க்கும் அதிகமான யோசனைகளைத் தெரிவித்திருக்கிறார்கள். அவற்றுள் கிட்டத்தட்ட 1000 யோசனைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. உற்பத்தியைப் பெருக்குவதற்கும், தொழிற்சாலை விபத்துக்களைத் தவிர்ப்பதற்கும், தொழிற்சாலையில் கிடைக்கும் பொருள்களையும், அநுபவ அறிவையும் கொண்டு சுயதேவையைப் பூர்த்தி செய்வதற்கும் இக்கருத்துக்கள் வழிவகுக்கின்றன.

உற்பத்தியின் ஆரம்ப நிலையில் இருந்தே சுய முயற்சியை ஊக்குவிக்கும் கருத்தரங்குத் திட்டத்திற்குத் (Suggestion Box Scheme) தாம் முன்னோடியாக அமைந்தது குறித்து டாடா ஸ்டீல் ஸ்தாபனத்தார் பெருமிதம் அடைகிறார்கள். இத்திட்டம் இப்பொழுது இந்தியாவில் உள்ள எல்லாத் தொழிற்சாலைகளிலும் நடைமுறைக்கு வரத் தொடங்கியுள்ளது.

**டாடா ஸ்டீல்**



The Tata Iron and Steel Company Limited

JWT TN 3274 A




## 46. "வாசி தீரவே காசு நல்குவீர்"

திருச்செங்காட்டங்குடியில் இருந்து பணி செய்யுமாறு சிறுத்தொண்டருக்கு விடை தந்து, வழியில் திருப்புகலூருக்குப் புறப்பட்டார் சம்பந்தமூர்த்திகள். திருப்புகலூரில் வாழும் முருகநாயனார் மிகவும் மகிழ்ந்து அவரை எதிர்கொண்டு இறைஞ்சினார். புகலூர் மேவிய புனிதரைப் போற்றிப் புகழ்ந்த புகலிவேந்தர் முருகநாயனாரது திருமடத்தில் தங்கியருளினார். திருப்பதிகத்தில் முருகநாயனாரது திருத்தொண்டினைச் சிறப்பித்துப் பாடியருளினார்.

"தொண்டர் தண்கயம் மூழ்கித்
துணையலுஞ் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக்
குறிப்பறி முருகன்செய் கோலம்
கண்டு கண்டுகண் குளிரக்
களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர்
வர்த்தமா னீச்சரத் தாரே"

அப்பொழுது திருநாவுக்கரசர் திருவாரூர் தியாகேசரைச் சேவித்து விட்டுத் திருப்புகலூருக்கு வந்தருளி வந்தருளினார்.

திருவாரூரின் சிறப்பைத் திருநாவுக்கரசர் கூறக் கேட்ட பாலறாவாயர், அப்பொழுதே திருவாரூர் சென்று புற்றிடங் கொண்ட புனிதரைப் போற்றுதற்கு விரும்பினார்.

பொன்னுலகம் போல் ஒளி செய்யும் திருவாரூரைக் கண்டு திருப்பதிகம் பாடியருளினார். முத்துச் சிவிகையை

விட்டிறங்கி மலர் தூவித் திருவாரூரை வணங்கினார். புற்றிடங்கொண்டாரைப் பன்முறை பணிந்தார்.

பணிந்து வீழ்ந்தனர் பதைத்தனர் பரவிய புளகம்
அணிந்து மேனியோ டாடினர் பாடினர் அறிவில்
துணிந்த மெய்ப்பொரு ளானவர் தமைக்கண்டு
துதிப்பார்
தணிந்த சிந்தையின் விரைந்தெழு வேட்கையில்
தாழ்ந்தார்

ஆரூர்த் தியாகேசனை ஆரா அன்புடன் வழுத்தினார் ஆளுடைபிள்ளைகள்:

தந்தையார் போயினார் தாயரும்
போயினார் தாமும் போவார்
கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார்
பார்க்கின்றார் கொண்டு போவார்
எந்தநாள் வாழ்வதற் கேமனம்
வைத்தியால் ஏழை நெஞ்சே,
அந்தணாரூர் தொழு துய்யலாம்
மையல்கொண் டஞ்சல் நெஞ்சே'

திருவாரூரினின்றும் பிரியாவிடை பெற்றுப் புறப்பட்டு, திருப்புகலூரை அடைந்தார். அங்கு திருநாவுக்கரசரும் அவரோடு சேர்ந்து கொண்டார்.

திருப்புகலூரிலிருந்து புறப்பட்டார். திருஞான சம்பந்தர். அப்பர்பெருமானும் அவருடன் தல யாத்திரை செய்யப் புறப்பட்டார். சிவிகை பின் வர, சம்பந்தர் நடந்து சென்றருளினார். ''இறைவர் உமக்குத் தந்த இச் சிவிகை மீது எழுந்தருளி வருவீர்'' என்று அப்பர்பெருமான் சம்பந்தரை வேண்டிக் கொண்டார். ''திருவருளின் திறம் இதுவாயின் திருத்தொண்டர்களுடன் நீர் முன்னுகச் செல்லும் தலத்துக்கு அடியேனும் தொடர்ந்து வருவேன்'' என்று சம்பந்தர் கூறியருளினார். அது முதல், அப்பர்பெருமான் முன்னே சென்று சேர்ந்த திருப்பதிக்குச் சம்பந்தர் போவாராயினார்.

திருவீழிமிழலையில் ஒப்பற்ற வரவேற்பு உபசாரனை பெற்ற காழிவேந்தர் அப்பர்பெருமானுடன் சேர்ந்து திருக்கோயிலுட் சென்று இறைவரை வணங்கிப் பதிகம் பாடியருளினார். திருமால் வழிபடும் பொருட்டு விண்ணுலகினின்றும் இறங்கிய விமானத்தைக் கண்டு வியந்து திருப்பதிகம் பொழிந்தருளினார்.

''சடையார்புன லுடையானொரு சரிகோவணம்
உடையான்
படையார்மழு வுடையான்பல பூதப்படை யுடையான்
மடமான்விழி யுமைமாதிடம் உடையானெனை
யுடையான்
விடையார்கொடி யுடையானிடம் வீழிம்மிழ லையே.

நாவுக்கரசருடன் ஒவ்வொரு காலமும் தவறாது திருக்கோயில் சென்று இறைவரை இனிது வழிபட்டுக் கொண்டு அங்கு பல நாட்கள் தங்கியிருந்தார் சம்பந்தர்.

அங்கண் அமர்வார் அரனார் அடியிணைக்கீழ்த்
தங்கிய காதலினால் காலங்கள் தப்பாமே
பொங்குபுகழ் வாகீசருங்கூடப் போற்றிசைத்தே
எங்கும் இடர்நீப்பார் இன்புற் றுறைகின்றார்

சீகாழியில் வாழும் அந்தணர்கள் திருஞான சம்பந்தரைக் காணும் விருப்பத்தினால் திருவீழி மிழலை வந்து சேர்ந்தார்கள்.

''பெருமானே! சீகாழிக்கு எழுந்தருள வேண்டும்'' என்று சம்பந்தரை வேண்டிக் கொண்டார்கள். அவர்களிடம், ''நாளை போவோம்'' என்று ஞானசம்பந்தர் அருளிச் செய்தார்.

அன்று இரவு காழிவேந்தர் கனவில் சீகாழியில் வாழும் திருத்தோணியப்பர் எழுந்தருளி, ''நாம் சீகாழியில் இருக்கும் திருக்காட்சியை இங்கு திருவீழிமிழலையிலேயே காட்டுகின்றோம்; கண்டு மகிழ்வாய்'' என்று அருள் புரிந்தார். ஞானசம்பந்தர் கனவு நீங்கி எழுந்தார். திருக்கோயில்சென்று சேவித்தார். அங்கு திருத்தோணி மீது அம்மையப்பராய் அண்ணலார் திருக்காட்சி தந்தருளக் கண்ட ஞானசம்பந்தர், அகமும் முகமும் குளிர்ந்து திருப்பதிகம் பாடிப் பரவினார். அந்த அற்புதக் காட்சியை அந்தணர்களிடம் உரைத்து அவர்களைச் சீகாழிக்குப் போகுமாறு கட்டளையிட்டருளினார்.

திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசருடன் திருவீழிமிழலையில் தங்கியிருந்த போது பயங்கரமான பஞ்சம் தோன்றியது.

அப்பரும் சம்பந்தரும் மக்களின் துயர் தீர இறைவரைத் துதித்துக் கண்ணயர்ந்தனர். விண்ணவர்க்கும் எட்டாத கண்ணுதற் கடவுள் அவர்கள் கனவில் எழுந்தருளி, ''உலகியல்பினால் எய்திய கொடிய பசித் துன்பம் உங்களை அடையாது; என்றாலும் உம்பால் சார்ந்துள்ள சிவநெறித் தொண்டர்களது வருத்தத்தை மாற்றும் பொருட்டு, நமது திருக்கோயிலில் கிழக்கும் மேற்கும் உள்ள அழகிய பலிபீடத்தில் நாடோறும் ஒவ்வொரு காசு தருவோம். பஞ்சம் தீரும் வரை அவ்வாறு அருள் புரிவோம்'' என்று திருவருள் புரிந்தார்.

கனவு தெளிந்து எழுந்த காழி வேந்தரும், திருநாவுக்கரசரும் திருக்கோயில் சென்று வலம் வந்தனர். இறைவருக்கு நேரே கிழக்குத்திசைப் பலி பீடத்தின் மீது விளங்கும் பொற்காசைக் கண்டார். ''அடியார்கள் அமுது செய்ய வாருங்கள்'' என்று பறை

பாரி மிட்டாய்கள்
தவிர்க்க முடியாதவை.
அவை ருசிமிக்கவை.
சத்துள்ளவை. பிறருடன்
பங்கிட்டு ருசித்து
மகிழுங்கள்.
பாரி மிட்டாய் இருக்கையில்
வாழ்க்கை மேலும்
இனிக்கிறது.
ருசித்திருக்கிறீர்களா?
ஜிஞ்சர்காப்ஸ் -
லாக்டோபால்பான்ஸ்
டெவன் க்ரீமி
டாபி—ஹெல்த் ப்ரூட்ஸ்,

என்ன அலட்சியம்
ஓஹோ... அவளிடம்
பாரி மிட்டாய்
இருக்கிறதோ!




பாரிஸ்—
உயர்தர மிட்டாய்
தயாரிப்பவர்கள்

பாரிஸ்
கன்பெக்ஷனரி
லிமிடெட்
மதராஸ்.

prs-4024a

யறைந்தார். அமுது செய்ய வந்த அடியார்கட்குக் குறைவின்றி அமுது ஊட்டினர். இவ்வாறாக, பசிப்பிணியைப் போக்கி, சம்பந்தரும், நாவுக்கரசரும் அப்பதியில் அமர்ந்திருந்தார்கள்.

திருநாவுக்கரசர் திருமடத்தில் அடியார்கள் உச்சிப் பொழுதுக்குள் அமுது செய்து முடித்தனர். அதனைக் கண்ட சம்பந்தர், தமது மடத்திலும் அடியார்களுக்கு விரைவில் அமுது அளிக்க வேண்டும் என்று விரும்பினர். தம்முடைய திருமடத்தில் சமையல் புரியும் பரிசனங்களை நோக்கி, ''அடியவர்க்கு இங்கு காலம் தாழ்த்தி அன்னம் படைக்கக் காரணம் யாது?'' என்று வினவியருளினர்.

''பெருமானே! இறைவர் தரும் காசினை எடுத்துக் கொண்டு கடைவீதியிற் சென்று உணவுப் பண்டங்களை வாங்க முயலும் போது, ''இக்காசுக்கு வட்டந் தரவேண்டும் என்று கூறுகின்றனர். திருநாவுக்கரசரது காசினை வட்டங்கேளாது பெற்றுக் கொள்கிறார்கள். அதனால் அவரது திருமடத்தில் உணவு முன்னதாகப் படைக்கப்படுகின்றது. வட்டந் தந்து காசினை மாற்றிப் பண்டம் பெற்று வந்து உணவு அமைக்க நமது மடத்தில் சிறிது காலதாமதம் ஏற்படுகின்றது. அதன் காரணம் யாதோ?'' என்று அமுது அமைக்கும் ஏவலர்கள் கூறினார்கள்.

அவர்கள் கூறியதைக் கேட்ட திருஞானசம்பந்தர் சிந்தனையில் ஆழ்ந்தனர். சிவபெருமான் பட்சபாதம் இல்லாதவர்; திருநாவுக்கரசருக்கு மட்டும் அவர் வாசியில்லாத காசினைத் தருவானேன்? நமக்கு வாசிபடும் காசினைத் தருவதற்குக் காரணம் யாது என்று சிந்தித்தார். ''ஆம்! அப்பெருந்தகையார் சமயத் தொண்டும் புரிகின்றார். அதனால் அத்திருவாளருக்கு வாசிபடாத காசைத் தருகின்றார் இறவர். நாளை நாம் வாசி தீரக் காசு தருமாறு பாடுவோம்'' என்று திருவுள்ளத்தில் எண்ணினர். அதன்படியே அடுத்தநாள் பாடியருளினர்.

வாசி தீரவே, காசு நல்குவீர்
மாசின் மிழலையீர் ஏச லில்லையே

வாசியில்லாத காசுதனை வழங்கியருளினர் இறைவர். அதனை எடுத்து ஏவலர்பால் தந்தார் சம்பந்தர். அவர்கள் அதனைக் கடைவீதியில் கொண்டு போய்க் கொடுத்தனர். ''இது நல்ல காசு; இதற்கு வேண்டும் பொருள்களைத் தருவோம்'' என்று கூறி, வேண்டிய பொருள்களைத் தந்தனர் வணிகர். அதுமுதல் சம்பந்தர் திருமடத்தில் அடியவர்கட்கு விரைவில் அன்னமளிக்கப்பட்டது. அளவிறந்த அடியார்கள் வந்து இரண்டு மடங்களிலும் அமுது செய்தும், அன்னம் குறையாது பெருகுமாறு அரனார் அருள் புரிந்தருளினர்.

மண்மிசை விண்மழை பொழிந்தது. அதனால் நன்கு விளைந்து எல்லா உயிர்களும் இடர் நீங்கி இன்புற்றன. பஞ்சம் பறந்தது. பல நாள் தங்கி இறைவரை இறைஞ்சிய பெருமக்கள் இருவரும் விடையவரிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டனர்.

# 47. 'பையவே சென்று பாண்டியற்காகவே'

திருமறைக் காட்டில் ஆலயத்தின் கதவு திறக்குமாறு அப்பர் பாட, அது மூடுமாறு சம்பந்தப்பிரான் பாடினர்.

திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் அடியார் குழாங்களுடன் அத்தலத்தில் தங்கியிருந்தபோது, பாண்டி நாட்டில் சமண இருள் சூழ்ந்தது: சைவ ஒளி குன்றியது. முன்செய் தீவினைப் பயனால், பாண்டிய மன்னன் சமண சமயத்தின் நெறியை அறம் என்று கொண்டான். ''அரசன் எவ் வழி அவ்வழி குடிகள்'' என்ற பழமொழிக்கேற்பக் குடிகள் அனைவரும் சமணம் தழுவினர். பாண்டிநாடு முழுதும் உள்ள ஊர்கள்தோறும் அருகருடைய பள்ளிகள் மலிந்தன. சமண முனிவர்கள் மயிற்பீலிகளை ஏந்திக் கொண்டு திரிந்தனர்.

அப்போது பாண்டி நாட்டில் பெண்ணில் ஒருவரும், ஆணில் ஒருவருமாக இருவர் சைவநெறியில் ஆழ்ந்து நின்றனர். சோழன் மகளும் பாண்டியனின் அரசியுமான மங்கையர்க்கரசியாரும், அமைச்சராகிய குலச்சிறையாருமே அவ்விருவர். திருஞானசம்பந்தர் உமாதேவியாரிடம் ஞானப் பாலுண்ட பெருமையையும், அவர் செந்தமிழ்ப் பதிகம் பாடி எங்கும் சைவநெறி பரப்பி வரும் அருமையையும் திருமறைக் காட்டில் தங்கியிருக்கும் தன்மையையும் அவர்கள் கேள்வியுற்றார்கள். அவர்களின் சிந்தை கிளர்ந்தது; மகிழ்ச்சி வளர்ந்தது; கவலை தளர்ந்

தது: முகம் மலர்ந்தது. சம்பந்தப் பெருமான் நெடுந் தூரத்தில் இருந்த போதிலும், அவரது சரண மலரைப் பணிந்தது போல் மகிழ்ச்சியுற்றார்கள். சிவஞானம் பெற்ற அச்செம்மலால் தான் பாண்டி நாட்டில் மீண்டும் சைவம் பரவ முடியும் என்று எண்ணினர். அறிவுமிக்க சிலரைத் திருமறைக் காடு சென்று திருஞான சம்பந்தரை அழைக்குமாறு விடுத்தனர்.

அவர்களும் அவ்வாறே திருமறைக் காடு சென்று சம்பந்தரிடம், ''எம் பெருமானே! எங்கள் தென்னாடு சமணர்களால் நிலைகுலைந்து விட்டது. மன்னனும் சமணத்தின் மீது மயலுற்றான். பாண்டிமாதேவியாரும் அமைச்சரும் இதனைத் தங்களிடம் விண்ணப்பம் புரியுமாறு எங்களை அனுப்பி வைத்திருக்கிறார்கள்'' என்று அவர்கள் தெரிவித்துக் கொண்டார்கள்.

''ஐயனே! சமணரை வென்று, கல்வி நாட்டில் சைவநெறியை நிலை நாட்டி, பாண்டியனும் திருநீற்றைப் பூசுமாறு செய்து, எங்கும் சிவமயமாக விளங்கச் செய்ய வேண்டும்'' என்று அருகில் இருந்த அடியார்கள் திருஞான சம்பந்தரை வேண்டிக் கொண்டார்கள். (தொடரும்)

---



## ஏதோ.... யாதோ.... மயக்கம்!

இன்பவண்ணன்

செக்கச் சிவந்த செவ்வா னுருகிச்
சீதனம் பெற்றுரு வாகியதோ - அன்றிச்
சொக்கக் கவினுறு தங்கக் கலவை
சீரிள வடிவம் தோற்றியதோ!

கோல மயில்தன் சாயலை யிவட்குக்
கொடையா யளித்துப போனதுவோ - வண்ணக்
கோலம் விளைக்குங் கொள்ளை யெழிற்குக்
குத்தகை யானதோர் பெண்ணுருவோ!

மொட்டு விரிந்ததோ; முல்லை சிரித்ததோ;
மோகனப் புன்னகை யென்பதிதோ - சின்னப்
பட்டு இதழ்களிற் பட்டு வொளிர்ந்திடு
பாவையின் மென்னகைக் கேதிணையோ!

காரோ குழலோ கருவண் டிருப்போ
கற்றை சரியுங் கானகமோ - இருள்
சேரா திருக்க வெழிலார் மதியம்
தானே வதனங் காட்டியதோ!

வில்லை வளைத்து வேற்கணை தொடுத்து
வெல்லும் போர்ப்படைக் கண்களதோ - ஆடிக்
கொல்லா வருத்துங் கொள்ளைக் கவர்ச்சி
கொள்ளுங் காந்தப் படிவங்களோ!

இருளும் ஒளியும் இரண்டறக் கலந்து
மருளும் மாலைப் போதிவளோ - இல்லை
திருவாய் உலவி யுளமே கவரும்
தென்னக முத்து ரத்தினமோ!

முன்னே ரழகு; பின்னே ரழகு;
முற்றும் எழிலின் செறிவாமோ - நடை
என்னே! நளின மென்னே! எனவே
எண்ணிக் கண்கள் கிறங்காவோ!

ஓர்முறை யவ்வெழில் உண்டிட வோடிய
உள்ளமும் கண்களும் மீளாவே - அவள்
வார்சிலை யாகவே வண்ணங்கள் தோய்ந்திட
வந்திடி லாடவர் ஓர்சிலையே!

இந்த

# நேஷனல் எக்கோ

டிரான்ஸிஸ்டருக்கு
உயரிய
ஒலிநயத்தைக்
தருவது எது?

## இதன்
## மரக்
## கேபினெட்.

ரூ.365.00
மட்டுமே.



மாடல் பிடி-1503

போர்ட்டபிள் டிரான்ஸிஸ்டர்.
9 டிரான்ஸிஸ்டர்கள் & டயோடுகள்.
3 பாண்டுகள். 2-டோன் மரக் கேபினெட்.
ஆறு 1.5 வோல்டு செல்களில்
இயங்குவது. (சுங்கத் தீர்வை உள்ளிட்ட
விலை. எல்லா வரிகளும் தனி.)

மரக் கேபினெட் இருப்பதால்தான் நேஷனல்-எக்கோ மாடல் பிடி-1503-க்கு இயற்கையான குரல் தெளிவு. கணீரென்ற கச்சிதமான எதிரொலிப்பு. கேட்க வேண்டுமா, உன்னதமான இயக்கம்! தேர்ந்தெடுக்க வேண்டிய காரணங்கள் தெள்ளத் தெளிவு. எந்தவொரு நேஷனல் எக்கோவையும் போல் இதுவும் மான்லைசென்ஸ்டு. பாரத நாட்டின் மிகப் பெரிய தொழிற்சாலையிலிருந்து வருகிறது.

**GRA**

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிட்.

பம்பாய் • கல்கத்தா • சென்னை • டெல்லி • பெங்களூர் • செகந்தராபாத் • பாட்னா

LFE-Aiyars-NE-97-879



# தேர்தல் கலாட்டா!

இயற்கையாகவே நீண்ட முகமுள்ள குமாரின் முகம் மேலும் நீண்டு வியப்புக் குறியாக நின்றது. 'என்ன இது?' என்று புரியாமல் நின்றான்.

இலேசில் வந்து பேசாத ரத்னசாமி நெருங்கி வந்து, ''ஹலோ, சௌக்கியமா?'' என்று கேட்டுவிட்டுப் போகிறான் !

''யார் யார் நிற்கிறார்கள்?'' ''சாரங்கபாணி தான் ஜெயிப்பான்'', ''நத்திங் டூயிங்! ரத்னசாமிதான் ஜெயிப்பான்!'' — போன்ற பேச்சுக்கள் அடிக்கடி காதில் விழுகின்றன. தேர்தல் பேச்சுக்கள் தட்டுப்படுகின்றன.

''அதுதான் பொதுத் தேர்தல் முடிந்து மந்திரி சபையும் வந்தாயிற்றே ! அப்புறமும் இதென்ன இது?'' என்று குழம்பிய குமார், அந்தப் பக்கமாக வந்த ராமனை இழுத்துப் பிடித்து நிறுத்தினான். ''டேய், பொடியா! என்னடா விஷயம்?''

''தேர்தல்டா ! நம்ம ஆபீஸ் ரிக்ரியேஷன் கிளப்பின் காரியதரிசிக்கான தேர்தல் நாளைக்கு நடக்கப் போகிறது.''

''எல்லா வருஷமும்தான் நடக்கிறதே! இந்த வருஷத்திலே மட்டும் அப்படியென்ன விசேஷம் ?''

''அதுதான் விஷயம்!'' ராமன் சொன்னான்.'' சாதாரணமாகவே வேட்பாளர் பெயரைச் சொல்லிவிட்டுக் கையைத் தூக்கச் சொல்லி எண்ணுவார்கள். எவனுக்கு எண்ணிக்கை அதிகமோ அவன்தான் ஜெயிப்பான் இல்லையா? இந்தத் தடவை அது கிடையாது. அசல் தேர்தல் பாணியிலேயே நடக்கப் போகிறது. அதோ பாரேன், தமாஷை !'' என்று எதிர்த் திசையை அவன் சுட்டிக் காட்டினான்.

அங்கே தூக்க முடியாமல் ஓர் அட்டையைத் தூக்கிப் போய்க் கொண்டிருந்தான் ரத்தினசாமி.

''டேய்! என்னடா, அது?'' என்றார்கள் சிலர். ''திருப்பிக் காட்டேண்டா!'' என்றார்கள் பலர். இன்னும் சிலர், ''இருடா, நாங்களும் வருகிறோம்'' என்றவாறு அவனைப் பின் தொடர்ந்து ஓடினார்கள்.

மூன்றாவது மாடிக்குப் போய் அந்த அட்டையைச் சுவரில் அறைந்ததும், அவனைச் சுற்றி ஒரு கும்பல் சேர்ந்து விட்டது.

படித்தவர்களில் சிலர் ரசித்தார்கள்; பலர் சிரித்தார்கள்.






சென்ற ஆண்டில்....

| சொன்னவை: | சாதித்தவை : |
|---|---|
| 1. சினிமாக்கள், செய்திப் படங்கள் | — |
| 2. காரம் விளையாட்டுப் போட்டி | — |
| 3. டேபிள் டென்னிஸ் பந்தயங்கள் | — |
| 4. உல்லாசப் பயணங்கள் | பிக்னிக் |
| 5. நாடகம் | — |
| 6. கிரிக்கெட் பந்தயம் | — |
| 7. ஷாப் புல்லட்டின் | — |
| 8. நிறையப் படிக்கப் பத்திரிகைகள் | — |

நிகழும் ஆண்டின் காரியதரிசியான சாரங்கபாணி மட்டும் பல்லைக் கடித்தான். 'அடப் பாவிகளா? எத்தனை செய்தேன்! எவ்வளவு பாடுபட்டேன்! கடைசியில் ஒரே ஒரு சின்ன பிக்னிக் மட்டும்தானா கண்ணில் பட்டது உங்களுக்கு? விட்டேனா பார்!'' என்று வீறுகொண்டு கிளம்பினான்.

அவ்வளவுதான்! தேர்தல் சூடு பிடிக்க ஆரம்பித்து விட்டது!

ரத்னசாமிக்குத் தெம்பு அதிகமாயிருந்தது. உதவி மானேஜர் அவன் பக்கம் இருந்தார். பெருந்தலை ஒன்றின் உதவி இருந்தது அவனுக்கு. அவர் சொன்னார். ''கவலைப் படாதே! உனக்காக நானே வோட்டுக் கேட்கிறேன். எப்படியும் உன்னைத் ஜெயிக்க வைத்துத்தான் மறுகாரியம்'' என்றார் அவர்.

''ஜெயித்து விட்டால் மட்டும் என்ன பிரயோஜனம்? நான் என்ன செய்ய? எனக்கு ஒரு மண்ணும் தெரியாதே காரியதரிசி வேலையைப் பற்றி.'' என்றான் ரத்தினசாமி.

''அதற்கும் கவலைப்படாதே! நீ வெறுமனே பேருக்கு இரு. நானே பார்த்துக் கொள்ளுகிறேன்'' என்ற பெருந்தலை விழித்தது. பிறகு ரத்தினசாமியிடம் ''மாடியில் என்ன அங்கே சப்தம்? என்ன கூச்சல்?'' என்று கேட்டார் உதவி மானேஜர்.

மூன்றாவது மாடியில்.... சாரங்கபாணியின் விளம்பரப் பலகை தொங்கிக் கொண்டிருந்தது. ''சொல்லுவதினால் பயனில்லை. செய்கை தான் முக்கியம். நான் சொல்ல மாட்டேன். செய்து காட்டுவேன். உங்கள் மேலான வோட்டுக்கள் எனக்கே — சாரங்கபாணி.''

''சரியான சவால்! எதிர்ச் சவால்!'' என்று அனைவரும் மெச்சிக் கொண்டிருந்தனர்.

''அந்தத் தருணத்தில் நகரு.... நகரு.... வழி.... வழி....'' என்று வழிகேட்டவாறு, பெரிய அட்டையோடு வந்தான் ஒருத்தன். அதில், ''உங்கள் வோட்டு பாகவுக்கே!'' என்று எழுதியிருந்தது.

''அடேடே! பாகமணியும் நிற்கிறானா ?'' என்ற கேள்விகளும், ''நேரடிப் போட்டி என்று நினைத்தேன். மும்முனைப் போட்டியாகி விட்டதே !'' என்பது போன்ற வியப்புக்களுமாக ஒரே அமளியாகி விட்டது.

''ஸார் !'' என்ற அலறலோடு ஓடி வந்த ரத்தினசாமிக்கு ஆறுதல் கூறினது பெருந்தலை. ''கவலைப்படாதே! ஊர் ரெண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம். சாரங்கபாணிக்கும், பாகவுக்கும் வோட்டுக்கள் சிதறினால் உனக்குத்தான் அதிகமாக வோட்டுக்கள் பதிவாகும். புரியவில்லையா ? மொத்தம் எழுபத்தைந்து பேரில்லையா ? அவர்கள் இரண்டு பேருக்கும் தலா இருபது இருபது என்று பிரிந்தாலும் உனக்குச் சுளையாக முப்பது நிச்சயம் தேறும். உனக்குத் தான் வெற்றி வாய்ப்பு இருக்கிறது.''

மறு நாள் ஆபீஸுக்கு வந்த ரத்னசாமி ஒரு மாறுதலைக் கவனித்தான். அவனையே பார்த்துக் கொண்டிருந்த மற்றவர்கள் சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டது போலவும் தெரிந்தது; அதே சமயம் வெடிக்க இருக்கும் சிரிப்பை அடக்கிக் கொள்ளப்படாத பாடு படுவதாகவும் தெரிந்தது.

கேலி செய்கிறார்களோ என்ற சந்தேகம் உறுத்தவே, நேரே மாடிக்கு ஏறிப் போய்ப் பார்த்தவனுக்கு விழி பிதுங்கிப் போயிற்று. திறந்த வாய் திறந்தேயிருக்க, விழித்த கண் விழித்தேயிருக்க 'வே' என்று விழித்தான்.

'ரத்னசாமி வெற்றிபெற்றால்' என்ற தலைப்புள்ள ஒரு போஸ்டரில் யாரோ 'ற்'றை அழித்து விட்டிருக்கிறார்கள். அது 'ரத்னசாமி வெறி பெற்றால்' என்று ஆகிவிட்டிருந்தது. கோபத்தினால் அவன் பல்லைக் கடித்தான்.

**தேர்தலுக்குச் சின்னங்கள் வேண்டுமே!**

யாரோ ஒரு புத்திசாலி சமைத்துத் தந்தான். சாரங்கபாணிக்கு மூன்று சீட்டுகள்; ரத்னசாமிக்குப் பூவிலுள்ள வில்லும் அம்பும்; பாகவுக்கு ஒரு புட்டி.

சின்னங்களுக்கும் அவர்களது சொந்த வாழ்க்கைக்கும் சம்பந்தமிருப்பதாகப் பேசிக் கொண்டார்கள்.

பாகமணி தேர்தல் அறிக்கையைப் பற்றி விவரித்துக் கொண்டிருந்த போது, குமார் முந்திரிக் கொட்டை மாதிரி கேட்டான். ''எது செய்து என்ன? ரூபாய்க்கு மூன்று அவுன்ஸ் தருவாயா?'' என்றான் அரசியல் மொழியில்.

அந்தப் பாகமணி ஒரு 'பர்மிட் ஹோல்டர்' என்பதும், கெஞ்சினாலும், கூத்தாடினாலும் ஒரு சொட்டுக்கூடத் தரமாட்டான் என்பதும் குறிப்பிடத் தக்கது.

ஒரு சிலருக்குத் தேர்தல்கூட அநுகூலமாயிருந்தது. அந்த ரத்தினசாமி செய்து முடிக்க வேண்டிய அவசர வேலைகளையெல்லாம் ''வோட்டு வேண்டுமானால் சீக்கிரமாக முடித்துக் கொடு'' என்று மிரட்டியே வாங்கிக் கொண்டு போய் விட்டார்கள்.

இந்த இடத்தில் ஒரு வார்த்தை சொல்லியே ஆகவேண்டும். அந்த ரத்தினசாமி ஜெயிப்பதை மற்றவர்கள் விரும்பவில்லை. காரணம் உதவி மானேஜரின் கூட்டுறவு. கூட்டம் கூடினார்கள். ரகசியம் பேசினார்கள். நிம்மதியுடன் நகர்ந்தார்கள்.

•

அன்று தேர்தல் நாள்.

அச்சகத்திலிருந்து வோட்டுச் சீட்டுக்கள் பிரசுரமாகி வந்துவிட்டன. சுமார் நான்கு மணி அளவில் ஹாலுக்குள் சட்டென்று நுழைந்த ரத்தினசாமியைக் கண்டு திடுக்கிட்டுப் போனார்கள் அனைவரும். ''என்னடா, என்ன ஆச்சு?'' என்று பதறி எழுந்தார்கள்.

அந்த ரத்தினசாமியின் நெற்றியில் பிளாஸ்திரி ஒட்டப்பட்டிருந்தது. ''சாரங்கபாணி கல்லால் அடித்து விட்டான். பாவி'' என்று சொல்லி அங்கிருந்த சாரங்கபாணியையே அயர வைத்தான்.

கொஞ்சம் பொறுத்துத்தான் அது போலிக் காயம் என்று தெரிந்ததும் அனைவரும் ரசித்துச் சிரித்தார்கள். அதுதான் சமயம் என்று நினைத்த ரத்தினசாமி ஆளுக்கொரு டேபிள் டென்னிஸ் பந்து இலவசமாக(!)க் கொடுத்தான். ''எனக்கே உங்கள் வோட்டு'' என்று கைகூப்பி நின்றான்.

வெங்கடபதி ஸார் என்று அழைக்கப்படும் அக்கௌண்டெண்ட் போய் அறையினுள்ளே உட்கார்ந்து கொண்டார். நீண்ட லிஸ்ட் ஒன்றுடனும், பக்கத்தில் ஒரு வோட்டுப் பெட்டியுடனும்.

அறைக்கு வெளியே ஒரே கும்மாளம். ''வரிசையாக நில்லுங்க. க்யூவில் நில்லு'' என்று சிலர் அதட்ட, ''நீயும் வந்து நில்லேன்'' என்ற அழைப்புக்களுமாகக் கொண்டாட்டமாக இருந்தது.

டெலிபோன் ஆபரேட்டர் அம்மாள் கொஞ்ச நேரம் திருதிருவென்று விழித்தார். 'இந்த இளைஞர்களின் கும்பலில் எப்படித் தானும் போய் நிற்பது என்று? நல்ல வேளையாக யாரோ 'லேடீஸ் அந்தப் பக்கம்' என்று சுட்டிக்காட்ட அந்தண்டைப் பக்கமாகப் போய்ப் பெண்களுக்கான க்யூவில்(!) தனியாக நின்று கொண்டார்.

ஒவ்வொருவராக உள்ளே போய் வெங்கடபதியிடம் வோட்டுச் சீட்டுக்களை வாங்கித் தனி அறைக்குப் போய்த் தங்கள் வேட்பாளர் பெயர் அருகிலே 'டிக்' பண்ணிவிட்டு மடித்துக் கொண்டு வந்து, வோட்டுப் பெட்டியில் போட்டு நகர்ந்தார்கள்.

எல்லோரும் போட்டு முடிந்ததும் வோட்டுகளை எண்ணினர்.

நிற்கமாட்டாமல் தவித்துக் கொண்டிருந்தான் ரத்தினசாமி. கிண்டல்காரப் பேர் வழிகள் சிலர் வேறு 'ஹேய்! ரத்னசாமி லீடிங்! ஏழாயிரத்தைந்நூறு வோட்டுக்கள் அதிகம்'' என்று சொல்லி அவன் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டிருந்தார்கள்.

எட்டிப் பார்த்த ஒருவன் சொன்னான்: ''பாகமணி சீட்டுக்களைச் சரி தானே' எண்ணுகிறான்? கற்றையாய் வைத்துக் கொண்டு எண்ணுகிறான், எண்ணுகிறான், அப்படி எண்ணுகிறான். இன்னும் முடிந்த பாடில்லை.'' அவன் சொன்னதைப் பாகவே கூட நம்பவில்லை. உண்மை தெரிந்தவனா யிற்றே! என்ன அது உண்மை? அது ரகசியம், பரம ரகசியம்!

ஒரு வழியாகக் கதவு திறந்து, 'இதோ ஓர் அறிவிப்பு' என்ற குரல் எழுப்பப்பட்டதும், டேபிள் டென்னிஸ் ஆடிக் கொண்டிருந்தவர்கள் பந்தை அப்படியே போட்டு விட்டு ஓடி வந்தார்கள். காரம் போர்டும், 'செஸ்'ஸும் ஆடிக் கொண்டிருந்தவர்கள் எழுந்து வந்து கும்பலாக நின்றார்கள்.

''சாரங்கபாணி நாற்பத்தி ஒன்பது. ரத்தினசாமி இருபத்திரண்டு. பாக ஒன்று. செல்லாத வோட்டுக்கள் மூன்று. சாரங்கபாணி ஜெயித்தார். பாகமணி டெபாஸிட் இழந்தார்'' என்று அறிவிக்கப்பட்டது.

மாலை மரியாதைகளுடன் சாரங்கபாணி பூரித்து மகிழ்ந்தார். அந்தச் சமயத்தில், மறு எண்ணிக்கை கேட்டான் பாகமணி! ''வந்ததே ஒன்று. அதில் என்னடா, —கௌண்டிங்?'' என்று எல்லோரும் சிரிக்க, ''அதுதானே ஆச்சரியம்! நானேகூட என் வோட்டைச் சாரங்கபாணிக்குத்தானே போட்டேன்! அதெப்படி வந்தது அந்த ஒன்று?'' என்றான் பாக.

ரத்தினசாமியைத் தோல்வியடையச் செய்ய வேணும் என்கிற எண்ணத்தால், அவனே சாரங்கபாணியுடன் கூட்டுச் சேர்ந்து, தனது நண்பர்களின் வோட்டுகளையும் சாரங்கபாணிக்கே போட வைத்து ஜெயிக்க வைத்த ரகசியம் தெரியாத ரத்னசாமி கூச்சல் போட்டுக் கொண்டிருந்தான்: ''ஆபீஸில் விஷப் பூச்சிகள் பரவி விட்டன! இனிமேல் இவர்களை ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும்!''

''காரியத்தில்தான் சொந்தம் கிடையாது என்றால் பேச்சில்கூடவா இரவல் பேச்சுப் பேச வேண்டும்?'' என்று குமாரைத் தொடர்ந்து கொல்லென்று சிரித்தார்கள் மற்றவர்களும்.

ஐயப்பன் புரொடக்ஷன்ஸ்

# உயிர் மேல் ஆசை

டைரக்ஷன் ஜம்பு





கதை-வசனம்: T.N.பாலு
பாடல்கள்: கண்ணதாசன்
இசை: எஸ்.எம்.எஸ்
காமிரா: கர்ணன்

NEGATIVE RIGHTS CONTROLLED BY SABARI FINANCIERS, MADRAS 14

தயாரிப்பு: வலம்புரி சிங்காரம் செட்டியார், K.S.கருப்பையா, C.R.சம்புலிங்கம், T.N.பாலு



சென்னை **பிளாசா . ஸ்ரீமுருகன் . மேகலா . ஜெயராஜ்**
மற்றும் தென்னாடெங்கும்

ELEGANT




**அத்தியாயம் 34**

**வே**லன்கடவு பஸ் நிலையத்திலிருந்து கௌரி யம்மன் கோவிலுக்குச் செல்லும் நிழலடர்ந்த பாதை வழியே உவகை துள்ளும் உள்ளத்துடன் சென்று கொண்டிருந்தாள் வள்ளி. அவளுடைய நடைக்கு ஈடு கொடுக்க முடியாமல் மூச்சு வாங்கிய வாறு மங்கா அவளோடு வேகமாக நடந்து கொண் டிருந்தான்.

உச்சிக்கடவிலிருந்து வேலன்கடவு வழியே கீழூர் வரை செல்லும் புதிய பஸ் வசதி இப்போது சில மாதங் களாக ஏற்பட்டிருந்தது. அந்த பஸ்ஸில்தான் வள்ளி யும் மங்காவும் சிறிது நேரத்துக்கு முன்பு வேலவன் பஸ் நிலையத்தில் வந்து இறங்கியிருந்தனர். அங்கிருந்து நடக்க ஆரம்பித்த நிமிஷத்திலிருந்தே வள்ளியின் வேகம் கணத்துக்குக் கணம் அதிகரித்துக் கொண்டிருந்தது. உண்மையில் மங்காவுக்கு மூச்சுத் திணறிவிடும்போலாகி விட்டது.

சட்டென்று அவன் வள்ளியின் கையைப் பிடித்து நிறுத்தினான்.

''அக்கா! நீ இவ்வளவு வேகமாக நடந்தால் என்னாலே உன்கூட நடக்க முடியாது. எங்கயாச்சும் நான் உக்காந்திர வேண்டியதுதான்'' என்றான்.

''கோவிச்சுக்காதே மங்கா. பூசாரி அய்யா கோயி லைப் பூட்டிக்கிட்டுக் கிளம்பறதுக்கு முன்னாலே அங்கே போய்ச் சேர்ந்திடணுமென்னுதான், நான் துடிக்கி



# வேம்பாதேவி

## துரோணன்

பாத்திரங்கள்:

1. பிலிம் டைரக்டர் - 'டோம் மிக்
2. காமிராமேன் - காளமேகம்
3. மேக்கப்மேன் - மேனிநாதன்
4. டயலாக்மேன் - டேவிட்
5. வில்லன் நடிகர் - குண்டப்பா
6. புது நடிகை - வேம்பாதேவி
7. வேம்பாதேவியின் கணவன் - நாணு'சாமி
8. பட முதலாளி - முனியப்பர்

மற்றும் பல நடிகர்கள் ஸ்டுடியோ வேலையாட்கள்.



முதல் காட்சி

(ஸ்டுடியோவின் மரத்தடியிலுள்ள நாற்காலிகளில் டைரக்டர் டோம்மிக்கும், அவருக்குப் பக்கத்தில் காமிராமேன் காளமேகமும் புகைந்த வண்ணமாக அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைச் சூழ்ந்து 'எக்ஸ்ட்ரா' நடிகர்களெல்லாம் உலாவிக் கொண்டிருக்கிறார்கள். அச்சமயம் எதிர்ப்புறம் ஷெட்டிலிருந்து மேக்கப் மேன் மேனிநாதன் கையிலுள்ள 'பிரஷ்ஷுட'னேயே ஓடி வருகிறான் அங்கே.)

மேனிநாதன் (உரத்த கூப்பாடாக): டைரக்டர் ஸார்! இந்த நிமிஷம் முதல் எனக்கு இந்த வேலையும் வேண்டாம்; கூலியும் வேண்டாம். என்னை ஆளை விடுங்கோ ஸார் — உங்களுக்குப் புண்ணியமுண்டு !

டைரக்டர்: அடேடே! என்னுப்பா இது ! வாட் ஸஸ் இ மேட்டர்? மேக்கப் எல்லாம் முடிஞ்சுதா இல்லையா ?

மேனி: நல்லா முடியும் மேக்கப்பு! இப்போ புதுசா வந்திருக்காங்களே ஒரு அம்மா, அவங்களுக்கு மேக்கப் போடறதுக்குள்ளாற என் தாவு தீர்ந்து. பிராணனும் பூடும்போலே இருக்குது !

டைரக்: ஏன், அப்புடி? என்னுப்பா ட்ரபிள்?

மேனி: அதென்னு ஸார் இது! எங்கேயோ காட்டுலே கிடந்ததைப் புடிச்சிக்கிட்டு வந்து இங்கே தள்ளிட்டு, நீங்கள்ளாம் மனுசன் உசிரை வாங்குறீங்க !

காளமேகம்: அட, நீ என்னுப்பா இது ! விஷயம் என்னுன்னு சொல்லாமே, 'ஓ'ன்னு கத்துறியே !

மேனி: ஸார், அவங்க மேலே போட்டிருக்கிற ரவிக்கையைக் கழட்டமாட்டாங்களாம்; கழுத்துலே கிடக்கிற சங்கிலி, சரடு, மூக்குப் பொட்டு ஒண்ணையும் எடுக்கமாட்டாங்களாம். அவங்களைத் தொட்டு 'மேக்கப்' செய்யக் கூடாதாம் !

டைலாக்மேன் (வியப்புடன்): அடேடே ! அது யாரப்பா அது? இப்போ புதுசா தேத்து வந்தாங்களே — வேம்பாதேவி அவங்களா?

மேனி (மிகுந்த அலட்சியத்துடன்): அட, ஆமப்பா ! பேருலே ஒண்ணும் குறைச்சலில்லே. பெத்த பேருதான் !

டைரக்டர் (பக்கத்திலிருக்கும் ஒருவனைப் பார்த்து): இந்தாப்பா, வாட்ச்மேன்! அந்தப் பொம்பிளையோட புருசன் யாரப்பா? அவரு எங்கேயிருக்கிறாரு ?

வாட்ச்மேன் (ஷெட்டின் மறுகோடியைச் சுட்டிக் காட்டியபடி): அதோ, பாருங்க ! புன்னை மரத்தடியிலே துண்டை விரிச்சுப் போட்டுக்கிட்டு, காலை சொறிச்சுக்கிட்டு இருக்கிறாரே, அவருதாங்க !

டைக்: வாட் நேஸ்டி மேன்! போயி அவரைக் கொண்டாப்பா இங்கே!

(வாட்ச்மேன் விரைந்தோடிப் போய் அழைத்து வருகிறான். முழுக்கை ஜிப்பா அணிந்த ஒருவர் அசட்டுக் களையுடன் கைகுவித்தபடி வருகிறார்.)

டைரக்டர் (சிறிதே கண்டிப்பாக): என்ன ஸார், நீங்கதான் அந்த லேடியோட ஹஸ்பெண்டா ?

வந்தவர் (அசட்டுச் சிரிப்புடன்): ஹி...ஹி ஆமாங்க....

டைரக்டர்: நீங்கள் எந்த ஊரு? உங்கள் பேரு ?

வந்தவர்: எங்களுக்குக் காராமணிக் குப்பத்துக்குக் கிழக்கே, கவுதாரி மேட்டிலே, ஈச்சங்குடிங்கிற ஊரு — என் பேரு நாணுசாமிங்க!

டைரக்டர்: பேஷ் பேஷ்! அப்படித்தான் இருக்கணும்னு நினைச்சேன்; சரி, இப்போ அந்த வேம்பாதேவிங்கிற ஸ்டார், உங்க வீட்டு — உங்கள் சம்சாரம்தானு?... இல்லே... வேறே....

வந்தவர் (வெருண்ட பார்வையாக) : ஹை! அதென்னுங்க, அப்புடிக் கேட்கிறீங்க? அதுலே ஒங்களுக்கு என்ன சந்தேகம்னேன்?

டைரக்: சரி, சரி, ரொம்ப சந்தோஷம்! அவங்களை எப்படிக் கொண்ணுந்து இங்கே சேர்த்தீங்க ? முதலாளியை உங்களுக்கு முன்னுடியே பளக்கம் உண்டா ?

வந்தவர்: அதெல்லாம் இல்லீங்க! எங்க சித்தப்பாரு மருமவப்பிள்ளை ஒருத்தர் இங்கே இருக்கிறாரு பாருங்க......?

டைரக்: அது யாரு, சித்தப்பாரு மருமவப் பிள்ளை ?

வந்தவர்: பீடா பொன்னப்பதாசன்னு —

பல குரல்கள் : ஆமா.... ஆமா.... பொன்னப்பதாசா ?

டைரக்டர் (அனைவரையும் வியப்புடன் பார்த்தபடி): ஹூ? ஹூயீஸ் தட் பொன்னப்பதாசு ?

லைட்டிங்மேன்: அவர்தான் ஸார், புரோக்கர் பொன்னப்பதாஸ்! உங்ககிட்டே தகராறு பண்ணினாரே !

டைரக்டர் (வியப்புடன்): ஓ! ஐஸீ! அந்த ஆளோட வேலையா? இதுலே கமிஷன் சான்ஸ் ஒரு தட்டுத் தட்டியிருப்பான் !

வந்தவர்: அவருதாங்க, எங்க சித்தப்பாரு மருமவன்! அவரு பட முதலாளிக்கு ரொம்ப வேணுங்கிறவராம். அவருதான் எங்களை இட்டுக்கினு வந்து அறிமுகப்படுத்தி இவளை...

(வில்லன் குண்டப்பா மீண்டும் மிகக் கடுமையான முகத்துடன் வருகிறார்.)

குண்டப்பா (கடுமையாக): என்ன ஸார் ? டயத்தைப் பார்த்தீங்களா? லெவன் தர்ட்டியாயிடுச்சே !

டைரக்டர் (முறுவலித்தபடி குண்டப்பாவை நோக்கிக் கையமர்த்திவிட்டு எதிரே உள்ளவரிடம்) : ஏன் ஐயா ! இதுக்கு முன்னுலே உங்க சம்சாரத்துக்கு சினிமா, நாடகம் எதிலேயாச்சும் அனுபவம் உண்டா?

வந்தவர் (கழுத்தைச் சொறிந்தபடி, அசட்டுக் களையுடன்): ம்... அப்படியெல்லாம் ஒண்ணும் நேரல்லீங்க. ஆனு....''

டைரக்: சரி, இப்போ சொல்லிக் குடுத்தாலாவது நடிப்பாங்களா, மாட்டாங்களா?

வந்தவர் (சற்றே பயந்தவாறாக): ஓ! ஓ! அதெல்லாம் சொல்லிக் கொடுத்தால், செய்வா.... செய்வா!

டைரக்டர் (வாட்ச்மேனை நோக்கி): இந்தாப்பா, ஷெட்டுலே இருக்காங்களே, அந்தப் பொம்பிளையை இங்கே அழைச்சிக்கிட்டு வா!

(காவலாளி போய் அழைத்து வருகிறான். அவள் வந்து கொண்டிருக்கிறாள்.)

ஒரு நடிகர்: ஆஹா! ஆஹா! பியூட்டியும் ஸ்டார்தான்!

மற்றொருவர்: எக்ஸலெண்ட் லேடி ! 'காதலே கதிமோட்சம்'ங்கிற படத்துக்கு, பெஸ்ட் செலக்ஷன்தான். முதலாளி தெரியாமலா புக் பண்ணியிருக்கார் ?

(அவள் தலைகுனிந்தபடியே டைரக்டரை நெருங்கி வருகிறாள்.)

டைரக்: என்ன மிஸ் வேம்பாதேவி ! 'மேக்கப்' போட்டுக்கமாட்டேன்னு தகராறு பண்றீங்களாமில்லே ?

(வேம்பாதேவி திரும்பித் தன் கணவனை ஒரு தடவை பார்த்துவிட்டுத் தலை குனிகிறாள்.)

டைரக்டர் (சிறிதே கடுமையாக): இந்தாம்மா, நீ இப்படியெல்லாம் இருந்தால் சினிமா பீல்டுக்கே லாயக்கில்லே; எல்லார் கூடேயும் 'ஸோஷலா' மூவ் பண்ணித்தான் ஆகணும்; தெரிஞ்சுக்கசாம்மா? நீங்க தான் இந்தப் படத்துக்கு மெயின் ஹீரோயின் !

(அவள் பேசாமலே நிற்கிறாள்.)

என்ன ஒண்ணும் பேசாமலே இருக்கீங்க? இங்கே பாரும்மா, இப்போ நீங்க என்ன செய்யணும்னு.... (பின் பக்கம் திரும்பி, குண்டப்பாவைச் சைகையிட்டு அழைக்கிறார்; குண்டப்பா நெருங்கி வருகிறார்) இங்கே பார்த்தீங்களா? இவர் வந்து உங்கள் தோளிலே கையைப் போட்டுக்கிட்டு நிற்பாரு; நீங்களும் இவருடைய இடுப்பை ஒரு கையாலே சுத்தி அணைச்சுக்கிட்டு இன்னொரு கையாலே (வேறுபுறம் திரும்பி) இந்தாப்பா, டயலாக் மாஸ்டர்! இந்த இடத்துலே என்ன டயலாக்? அதைப் படியேம்பா !

வேம்பாதேவி (பதறும் குரலில் உரத்து): ஐயையோ ! இந்த உலக்கைத் தடியனையா கட்டிக்கிட்டு —

(மேலும் வெருண்டவாறே தன் வாயை ஒரு கையால் மூடிக்கொண்டபடி பின் நோக்கிச் செல்லுகிறாள். பலத்த சிரிப்பொலி யாவரிடமிருந்தும் ஒருமித்து வெளியாகின்றது.)

குண்டப்பா (வேம்பாதேவியை வெறித்துப் பார்த்தபடியே): நான்ஸென்ஸ்! என்ன டைரக்டர் ஸார் ! இதென்ன ஸார் இது? இந்தப் பட்டிக்காட்டுப் பொம்பிளே ரொம்ப 'டாமேஜிங்கா'ப் பேசுது. நீங்களும் பார்த்துக்கிட்டே இருக்கீங்க ?

டைரக்டர் (மிகக் குழைவாக): மிஸ்டர். ப்ளீஸ்.... எனக்காக 'எக்ஸ்கியூஸ்' பண்






## வசந்த காலத்திற்கு —
## பாதங்கள் பற்றிய குறிப்புகள்




**Bata**




வெளியே செல்லும் போதெல்லாம் சிரமமின்றி விரும்பதை உணருவீர்கள். பாதங்களில் அணிந்திருப்பதே தெரியாது. வெய்யிலில் போகும்போது மகிழ்ச்சியளிப்பதை உணரலாம். இன்றே ஒரு பாடா சப்பலோ அல்லது சாண்டலோ வாங்கி அணியுங்கள். பாதங்களுக்குச் சுகம் தரும் வகையில் அமைக்கப் பெற்றிருப்பதை நன்கு அறிந்து கொள்ளுவீர்கள். இருபத்தி நான்கு மணி நேரமும் அணிந்திருங்கள் — ஒரு நிமிஷம் கூட காலைவிட்டுக் கழற்ற மனம் வராது!









ணுங்கம் (சலாம் வைக்கிறார். பின்னர் மறு பக்கம் திரும்பிக் கடுமையாக) இந்தாம்மா! என்னான்னு நினைச்சுக்கிட்டுப் பேசறே? இப்படியெல்லாம் இருக்கிறதுன்னு உன் வீட்டு அடுப்பங்கரையிலேயே இருந்துக்கிடணும். இங்கே ஏன் வரணும்? சொல்லிக் கொடுத்தாக்கூட நீ நடிக்கமாட்டே போலேயிருக்குதே? பேஷ்! உன்னே ஹீரோயினாக வைச்சுக்கிட்டால், உருப்பட்டாப்பிலேதான்!

ஒரு நடிகர்: ஹீரோயினே ரொம்ப சீப்ரேட்டிலே புடிச்சிருக்காரு முதலாளி!

டைரக்: மிஸ்டர் மேனிநாதன்! நீங்களே முதலாளிக்கும் போன் பண்ணிடுங்க; இது வொண்ணும் சரிப்பட்டு வராது! அவரும் வந்து இந்த ஹீரோயின் லட்சணத்தைப் பார்க்கட்டும்!

மேனி: சரி, இப்போ என்ன ஸார்பண்றது? இன்னிக்கு ஷெட்டிங் பூராவும் வேஸ்டுதானா?

டைரக்: வேஸ்ட்டு இல்லே, கிரிமினல் வேஸ்ட்டு! அதுக்கு நாம்ப என்னப்பா பண்றது? எல்லாரையும் போகச் சொல்லிடு! எனக்கே 'மூட்' சரியில்லே. (குண்டப்பாவைப் பார்த்து) மிஸ்டர் குண்டப்பா! தயவுசெய்து நீங்கள் இன்னிக்குப் போய் வாங்கோ! உங்களுக்கும் இன்னிக்கு 'மூட்' சரியில்லே. நாளைக்குக் காலையிலே எப்படியிருந்தாலும் உங்க போர்ஷனை ஷூட் பண்ண ஆரம்பிச்சுடுவோம். குட் பை!

(சலாம் வைக்கிறார். குண்டப்பா விறைத்த வண்ணமாக, முகத்திலிருக்கும் ஒட்டு மீசையை எடுத்துக் கொண்டு போகிறார். பிற நடிகர்களும் கலைந்து செல்லுகிறார்கள்.)

டைரக்: ஐயா சச்சங்குடி! உங்கள் சமுசாரத்தை அழைச்சிக்கிட்டு அந்த ஷெட்டுப் பக்கம் போயி இருங்க; முதலாளி வருவாரு. கூப்பிடறேன். (அவர்களும் போகிறார்கள். சலிப்புடன்) நல்ல கதை; நல்ல ஹீரோயின்! பெரிய ஏளவாப் போச்சுது!

(மிகுந்த ஆயாசத்துடன் நாற்காலியில் அமருகிறார்)

லேட்டிங்மேன்: ஏன் ஸார், நீங்களானால் துணிச்சலாக் கடையை மூடிட்டீங்களே? படம் இரண்டாயிரம் அடிகூட நேத்துவரையிலே ஆவுலே; அந்த ஆளு வந்தார்னு ஒன்னு கூத்தாடுவாரே!

மேனி: நல்லாக் கூத்தாடட்டும்! இந்த ஹீரோயினைக் கட்டிக்கிட்டு ஒரு குரலும் அழுவட்டும்!

டயலாக் மேன் (மிகுந்த மகிழ்ச்சியாக): டைரக்டர் ஸார்! ஒரு முக்கியமான விஷயம். பேசாமே, நான் சொல்றபடி எனக்கு மதிப்பு வைக்கிறீங்களா?

மேனி: ஏன், இப்போ உங்களுக்கு என்ன மதிப்புக் குறைஞ்சிடுச்சு?

டயலாக்: இதோ பாருங்க; என்கிட்டே காயிதம் இருக்குது — பேனா இருக்குது. இதோட, என் மூளைக்கும் மதிப்பு வைச்சீங்கன்னா, உங்களுக்கும் நல்ல பேரு; முதலாளிக்கும் நஷ்டமில்லே; என்ன சொல்றீங்க?

டைரக்டர் (சிறிதே வியப்பாக): வாட்.... வாட்......?

டயலாக் (டைரக்டரை நெருங்கி உட்கார்ந்து): இப்போ முதலாளி ஏதாச்சும் குறுக்கிட்டு, 'ஆ—ஊன்னு சொன்னாருன்னால்'

## மனிதர்கள் நால்வகை

''மனிதரில் நான்கு வகையினர் உண்டு. விவரம் தெரியாதவன், தனக்கு விவரம் தெரியாது என்று உணராதவன் மூட்டாள். அவனை ஒதுக்கிவிடு.

விவரம் தெரியாதவன், தனக்கு விவரம் தெரியாது என்ற உண்மையை உணர்பவன். எளிமையானவன். அவனுக்குக் கற்றுக் கொடு.

விவரம் தெரிந்தவன், தனக்கு விவரம் தெரியும் என்ற உண்மையை உணராதவன். உறக்கத்தில் ஆழ்ந்து கிடப்பவன். அவனை எழுப்பிவிடு.

விவரம் தெரிந்தவன், தனக்கு விவரம் தெரியும் என்ற உண்மையை உணர்பவன். அறிவாளி. அவனைத் தொடர்ந்து செல்.'' - பார்ட்டன் சிமாட்டி

தகவல்: - தங்க சங்கர பாண்டியன்

---

அவரு 'ஐ. பீ.' குடுக்க வேண்டியதுதான்; அவரைச் சரிக்கட்டறது உங்கள் பொறுப்பு!

### இரண்டாம் காட்சி

(ஸ்டுடியோவில் படம் எடுக்கும் கெடுபிடி நிறைந்திருக்கிறது. டைரக்டரின் சமீபமான நாற்காலியில் முதலாளி அமர்ந்திருக்கிறார்.)

டைரக்: என்னாங்கோ, இந்தப் பொம்பிளை ஒன்னைக் கொண்ணாந்து 'ஹீரோயி'னாகத் தள்ளி விட்டிருக்கீங்க; அது என்னடான்னால்—

முதலாளி: ஐ ஆம் ஸாரி. என்னமோ இந்தப் புரோக்கர் பொன்னைப்பதாகதான் இவளைக் கொண்டாந்து நிறுத்தி, இவள் இந்திரமதி, சந்திரமதின்னு வருணிச்சான். ஆளைப் பார்த்தேன்; முகவெட்டு நல்லா இருந்திச்சு — பாடியும் கட்டா இருந்திச்சு: நமக்கும் ஹீரோயின் தேவையாச்சே, புது முகமா இருந்தாலும் இருக்கட்டும்னுதான் புடிச்சுப் போட்டேன்.

டைரக்: எக்ரிமெண்டெல்லாம் ஆயிடுச்சுங்களா?

முதலாளி: ஓ! இரண்டாயிரம் ரூபாய்க்குச் 'செக்கு' குடுத்திருக்கேன் ஸார் — இப்போ எங்கே அந்தப் பொம்பிளை?

டைரக்: பின்னே ஏனிப்படி அந்தப் பொம்பிளே மக்கர் பண்ணுது? (பின்பக்கம் திரும்பி) ஏய், யாரப்பா, கிளீனர்! அந்த ஷெட்டுலே போயி, அந்தப் புது ஸ்டார் இருக்குது பாரு: அதையும் அவள் புருசனையும் கையோடக் கூட்டிவாப்பா!

(கிளீனர் போகிறான். மேக்கப் ஷெட்டிலிருக்கும் எல்லா நடிகர்களும் மரத்தடி சமீபமுள்ள அட்டைப் பங்களாவுக்கு வந்து சேருகிறார்கள். வில்லன் குண்டப்பாவும் வருகிறார்.

வேலையாள் இரண்டு நாற்காலிகளை எடுத்துப்போய் அந்த அட்டை பங்களாவின் முகப்பில் போடுகிறான்.

டைரக்டர் கேமிராமேனைப் பார்த்துப் புன்னகையிட்டபடியே அந்த நாற்காலியில் போய் அமரவும், முதலாளியும் அங்கு போய் மற்றொன்றில் உட்காருகிறார். புது நடிகை வேம்பாதேவியும் அவளது கணவனும் அங்கே வருகிறார்கள்.)

முதலாளி: இந்தாம்மா, வேம்பாதேவி! நீ இன்னு இப்படி வம்பு பண்றே? தெற? நீ ரொம்ப நல்ல நடிகைன்னு பொன்னைப்பதாக சொன்னாரு; நானும் நீ நல்லா ஷைன் பண்ணுவேன்னுல்லே நினைச்சேன். தெற!



"இரண்டு பேர் சேர்ந்து கத்தியாலே ஒருத்தனைக் குத்திட்டாங்களாம்."

"பாவம்! ஒருத்தராலே தூக்க முடியாத பெரிய கத்தி போலிருக்கு அது!"

---

(டைரக்டர் முதலாளியை நோக்கிக் கையமர்த்தி விட்டு, வில்லன் குண்டப்பாவை அழைக்கிறார். அவரும் நெருங்கி வருகிறார்.)

டைரக்டர்: இந்தாம்மா, வேம்பாதேவி! நேத்துத்தான் தகராறெல்லாம் பண்ணினே; இன்னைக்காவது நான் சொல்றபடி கேட்கணும்; தெரிஞ்சுதா? இதோ பாரு. (குண்டப்பாவைச் சுட்டிக்காட்டி) இவரு கிட்டே வந்து நில்லு; நேத்து நான் சொன்ன மாதிரியே இவர் உன்னைத் தோள்மேலே...

வேம்பா (மிகுந்த மிரட்சியும், பதற்றமும் கொண்டவளாக, உரத்த குரலில்): ஐயையோ! நான் மாட்டேன். நான் மாட்டேனுங்க; கண்ட கண்ட ஆம்பிள்ளைங்களை யெல்லாம் கட்டிக்கிட்டு —

முதலாளி (மிகுந்த ஆத்திரமாக): தே! என்ன முடியாதுங்கறே? ரூவா இரண்டாயிரமல்ல கொட்டியழுதிருக்கேன்? — (நாணுச்சாமியின் பக்கம் திரும்பி) என்னய்யா நாணுச்சாமி — மரம் மாதிரியா நிக்கிறீயே, என்னய்யா?

(வேம்பாதேவி மிகுந்த பரபரப்புடன் முதலாளியின் எதிரிலே வந்து] அவருடைய காலிலே விழுகிறாள்.)

வேம்பா (அழுதவாறாக): எஜமாங்களே! எனக்கு ஒண்ணும் தெரியாது. எங்க வீட்டுக்காரருக்கும் ஒண்ணும் தெரியாதுங்க; எங்களுக்குப் பன்னண்டு வயசுலியே கண்ணாலம் ஆயிடுச்சுங்க; நாங்க கிராமத்துலே நாலு காணிக் குத்தகை வைச்சுக்கிட்டுப் பிழைச்சுக்கிட்டு இருக்கோம்ங்க; நாங்கள் பட்டணம் பார்க்கறதுக்காக வந்தோங்க; வந்த இடத்துலே, இவரு சித்தப்பாரு மருமவன்தான் இவருகிட்டே எப்படியெல்லாமோ பேசி, இவரை மயக்கி வைச்சுட்டானுங்க; அவரு ஐந்நூறு ரூவா பணம் குடுத்தாருங்க —

முதலாளி (வெகுண்டபடி) என்னது, என்னது? ஐந்நூறு ரூவா குடுத்தாரா? இரண்டாயிரம் ரூபாய்க்கல்ல செக்கு குடுத்தேன்; நீயும் அதிலே கையெழுத்துப் போட்டிருக்கிறே?

வேம்பா: ஐயோ! சத்தியமா எங்களுக்கு ஒண்ணும் தெரியாதுங்க; அவருதான் என்கிட்டே கையெழுத்து வாங்கிக்கிட்டுப் போயி, பணம் மாத்திக்கிட்டு வந்தாருங்க.

டைரக்டர்: என்ன ஸார்? அந்த ஆளு புரோக்கர் மோசடியிலே பண்ணியிருக்காருன்னு தெரியுது?

ஸ்டுடியோ ஆள்: அந்த புரோக்கர் இன்னிக்குக் காலையிலேதான் பம்பாயிக்குப் போறாருங்க. நான் மீனம்பாக்கத்துலே பார்த்தேனுங்க!

முதலாளி: அடப் படுபாவி!

டைரக்டர்: ஒண்டர்! ஒண்டர்!

முதலாளி (மிகுந்த ஆத்திரமாக அவளை நோக்கி): இந்தாம்மா, நீங்க கையெழுத்துப் போட்டது; சாட்சிகள் உள்பட என்கிட்டேயிருக்குது. மரியாதையாக இவங்க சொல்றதைக் கேட்கிறீயா, இல்லாட்டி, உங்களைக் கொண்டு போயி போலீசிலே சொல்லி....

வேம்பா (உரத்து): ஐயையோவ்! நான் மாட்டேனுங்க! இந்த மாதிரியெல்லாம் செஞ்சுதான் படம் புடிப்பாங்கன்னு தெரியாதுங்க. அந்தச் சண்டாளப் பாவி — நான் மாட்டேன் — நான் மாட்டேன்!

(விழுந்தடித்து ஓடுகிறாள் வெளியே.)

நாணுச்சாமி (உரத்தக் கூப்பாடாக): வேம்பூ! வேம்பூ! ஐயையோ!

(அவளைப் பின்பற்றி ஓடுகிறான் வெளியே.)

முதலாளி (பரபரப்புடன் எழுந்து ஆத்திரக் குரலாக): ஏய்! வாட்ச்மேன்களா! என்னங்கடா, பார்த்துக்கிட்டா நிக்கிறீங்க? அவங்களைக் கட்டிப்புடிச்சுக் கொண்டாங்கடா — இங்கே!

(காவல்காரர்கள் ஓடுகிறார்கள்.)

டைரக்டர் (கையை உயர்த்தியபடியே காமிராமேனைப் பார்த்து): கட் கட் கட்!

(காமிராமேன் சுவிச்சை அமுக்கிவிட்டுத் திரும்புகிறார்.)

முதலாளி (மிகுந்த அதிர்ச்சியுடன் டைரக்டரைப் பார்த்து): ஸார்! இது என்னங்க இது? இப்போ நடந்ததை யெல்லாம் படமாவா எடுத்திட்டீங்க?

கா.மேன்: (மகிழ்ச்சியுடன்): ஓ—கே ஸார்! எல்லாம் எக்ஸலெண்ட் ஷாட்!

முதலாளி (மிரண்ட பார்வையுடன்): ஐயையோ!

டைரக்டர் (புன்சிரிப்புடன்): ஸார் பயப்படாதீங்க. படம் ஸக்ஸஸ்! இந்தப் படத்துக்கு, நீங்கள் நான் ஸ்டுடியோ ஆட்கள் — எல்லாருமே நடிகர்கள்தான்! இப்போ நடந்ததெல்லாம் படத்துக்கு ஸஸ்பென்ஸ்! நீங்க செலக்ட் பண்ணின ஹீரோயினை வைச்சுக்கிட்டு இப்படித்தான் படம் எடுத்தாகணும். ஆனால் நீங்க எழுதியிருக்கிற கதைதான் மாறிப்போயி, 'காதலே கதி மோட்சம்' என்கிற டைட்டிலும் மாறுது! இதுவொரு 'வில்லேஜ் கேர்ள் ஸ்டோரி'! (பின்பக்கம் திரும்பி டயலாக் மேனைப் பார்த்து) மிஸ்டர் டேவிட்! இதுக்கு மேற்பட்ட கதைப் போர்ஷனைப் படிச்சுக் காட்டுங்க ஐயாவுக்கு!

(முதலாளி திகைப்புடன் அமருகிறார்.)

# சிக்கனம்
# +
# நீடித்த உழைப்பு
# =
# ஜென்ஸோலின்

ஜென்ஸோலின் பிளாஸ்டிக சுவர் பெயிண்டுதான் குறைந்த விலையுள்ள உயர்க அலங்கார வேலைக்கான பெயிண்டு ஆகும். விதவித மான வசீகர நிறங் களில் கிடைக்கும்.

ஜென்ஸோலின் ஸின்தெடிக் எனமல் எளிதில் உலரும் பெயிண்டு. ஒளி வீசும் புதுத்தோற் றத்தைத் தருகிறது. உங்களுக்கு விருப்ப மான எந்த வசீகர வண்ணமும் கிடைக் கும்.

## பெயிண்டு







தயாரிப்பாளர்கள்

**ஜென்ஸன் & நிகல்ஸன்** மிக அதிக அளவில் விற்கும் ரோபியாலக் தயாரிப்பவர்கள்



★ இதுவுமா கள்ளமார்க்கெட்?

★ பார்வேயின் மறைவு

★ ஜனநாயகத்துக்குச் சவால்

ஒவ்வொரு ராஜ்யத்திலும் அரசினர் தேவையான ஸ்டாம்பு வெண்டர்களை நியமித்துப் பொதுமக்களுக்குத் தேவையான முத்திரை ஸ்டாம்புப் பத்திரங்களை விற்பனை செய்து வருவது எல்லோரும் அறிந்த விஷயம். ஆனால் எவ்வித விற்பனைக்கும் தற்போது கள்ள மார்க்கெட் அல்லது கறுப்பு மார்க்கெட் தோன்றி விட்டது. தற்போது பெரும் பான்மையான ஸ்டாம்பு வெண்டர்களிடம் சாதாரணமாக ஜெனரல் ஸ்டாம்புகள் கிடைப்பதில்லை. காரணம் ஏதேதோ காரணங்களினால் அவர்களுக்குக் கஜானாக்களி லிருந்து ஜெனரல் ஸ்டாம்புகள் விற்பனைக்குக் கொடுக்கப்படுவதில்லையாம்.

அரசினர் இப்போதாவது கண் விழித்துக் கொண்டு இந்தக் கறுப்பு மார்க்கெட்டை உடனடியாக ஒழித்துக் கட்டத் தேவையான துரித நடவடிக்கைகளைக் கையாளுவார்களா என்பது தெரிய வேண்டும். அது வரையில் பொதுமக்கள் கறுப்பு மார்க்கெட்டில் முத்திரை ஸ்டாம்புப் பத்திரங்கள் வாங்கிக் கொண்டு அவதியுறவும் அதிக விலை கொடுக்கவும்தான் வேண்டும் என்கிற நிலையில் உள்ளனர்.

சீர்காழி
13—2—67 எஸ். வி. அய்யர்

பம்பாய் மாதுங்காவில் உள்ள ஸ்ரீ வேதாந்த தேசிக சம்பிரதாய சபை கடந்த இருபத்தைந்தாண்டுகளாக நமது புராதன சமயப் பண்பாட்டுக்கும், ஸ்ரீ ராமானுஜரும் வேதாந்த தேசிகரும் காட்டிய அருள்நெறிக்கும் பணி புரிந்து வருகிறது. ஆசாரியர்கள், ஆழ்வார்கள் ஆகியோரின் உற்சவங்களும், பிரபல பண்டிதர்களின் விரிவுரைகளும், உயர்ந்த துதிப் புத்தக வெளியீடுகளும் சபையின் ஆதரவில் நிகழ்ந்து வருகின்றன. இப்போது சபையானது நீண்டகால அடிப் படையில் ஒரு மனைக்கட்டைக் குத்தகைக்கு எடுத்துள்ளது. இங்கு சபைக்கெனச் சொந்தக் கட்டடம் கட்டி, வேத வகுப்புகள், நூல் நிலையம் ஆகியவற்றை நிறுவ உத்தேசிக் கப்பட்டுள்ளது.

சிறந்த இம்முயற்சிக்கு அன்பர்கள் பொருளுதவி புரிந்து பயன்பெறச் செய்ய வேண்டுகிறோம்.

Treasurer, Sri Vedantha Desika Sampradaya Sabha, 1/277, Deodhar Road, Matunga, Bombay-19 என்ற விலாசத்துக்குத் திரவியம் அனுப்ப வேணும்.

பம்பாய் பி. ஆர். கிருஷ்ணஸ்வாமி
6—2—67 (நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்)

கல்கி 12-3-67 இதழில் நாருத்தின் அவர்கள் வோட்டுச் சாவடிக்கு எடுத்துச் செல்லும் அடையாளச் சீட்டு பற்றி குறிப் பிட்டுள்ளார்.

வோட்டுச்சாவடிக்கு எடுத்துச் செல்லும் அடையாளச் சீட்டில் தற்சமயம் நடைமுறையிலுள்ள தேர்தல் விதிப்படி வேட் பாளரின் கட்சியின் சின்னத்தை மட்டிலும் அச்சடிப்பதில் தவறில்லை; அந்தச் சீட்டில் சின்னத்துடன் கட்சிச் சார்புள்ள கொள்கை களை அச்சிட்டிருந்தால்தான் தவறு.

சிதம்பரம்
9—3—67 வெ. வெங்கடேஸ்வரன்

"ஒரே ஒரு காங்கிரஸ் பிரமுகரேனும் தாம் உண்மை என்று கருதியதைப் பேசிய தற்கா நான் மகிழ்கிறேன்" என்ற ஸ்ரீ எஸ். ஜி. பார்வேயைப் பற்றிய ராஜாஜியின் கருத்தை இந்த 12—3—67 இதழில் படித்து உள்ளம் உருகினேன். ராஜாஜி எழுதிய வாசகத்தின் மை உலர்ந்திருக்குமோ என்னவோ, திரு பார்வே அமரராகிவிட்டார் என்ற செய்தி பாரத மக்களைத் திடுக்கிட வைத்தது. அந்த 'ஒரே ஒருவரையும்' நாடு இழந்து விட்டது துரதிர்ஷ்டமே. அன்னாரது ஆத்மா சாந்தி அடைவதாக!

சென்னை—7
10—3—67 வி. ச. வாசுதேவன்

ராஜஸ்தானில் மெஜாரிட்டியுடன் ஒன்று சேர்ந்துள்ள கூட்டணியினரை மந்திரிசபை அமைக்க அழைப்பு விடாமல் பழைய முதன் மந்திரி மோகன்லால் சுகாடியாவை மந்திரி சபை அமைக்குமாறு ராஜஸ்தான் கவர்னர் டாக்டர் சம்பூர்ணானந்த் அழைத்திருப்பது ஜனநாயகத்துக்கு விடப்பட்டுள்ள ஒரு சவாலாகும். இந்தக் கவர்னர் முன்பு உத்தரப் பிரதேச அரசியலில் தீவிரமாக ஈடுபட்டிருந்த ஒரு காங்கிரஸ்காரர்.

மோகன்லால் சுகாடியா மீது விசாரணை நடத்த வேண்டும் என்று ஏற்கனவே புகார் கொடுக்கப்பட்டுள்ளது. கவர்னர் பதவிக்கு அரசியல்வாதிகளையே நியமிக்காமல் ஓய்வு பெற்ற ஹைகோர்ட் நீதிபதிகளையும் சுப்ரீம் கோர்ட் நீதிபதிகளையும் நியமித்தால் இவ்விதம் தவறுகளெல்லாம் ஏற்படாது.

திருவண்ணாமலை
6—3—67 கே. வி. ராமதுரை

(இப்பொழுது ராஜஸ்தானில் ஜனாதிபதியின் ஆட்சியை அமுலுக்குக் கொண்டுவந்துள்ளதாகச் செய்தி கிடைத்துள்ளது. -ஆசிரியர்)

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No M. 4392
Registered as a Newspaper in Ceylon




# பனாமா

## ஒரு நல்ல சிகரெட்

செழுமையான
வர்ஜீனியாப் புகையிலை
சீர்நிரவிய கலவை
புதுமை மயமானது



# இழுக்க
# இழுக்க
# இன்பம்
# இறுதிவரை

கோல்டன் டொபாக்கோ கம்பெனி பிரைவேட் லிமிடெட், பம்பாய்-56.
பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது




-C. Advtg